# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்



புரட்டாசி செப்டம்பர்—1983




மணக்குள விநாயகர், பாண்டிச்சேரி

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

(மாதப் பத்திரிகை)

இந்தப் பத்திரிகைக்கு ஏஜெண்டுகள் நியமிககப்படாத ஊர்களுக்கு ஏஜெண்டுகள் தேவை. முன்பணம் கட்டக்கூடிய பத்திரிகை விற்பனையாளர்கள் தொடர்பு கொள்ளவும்.

**சந்தா விவரம்**

| | |
|---|---|
| வருட சந்தா | ரூ. 15 |
| ஆயுள் சந்தா | ரூ. 180 |
| தனிப் பிரதி | ரூ. 1-50 |

ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.

வருட சந்தாதாரர்களை ஆயுள் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொள்வதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி புரியக் கோருகிறோம். ஆயுள் சந்தா என்பது 35 ஆண்டுகளுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் என்பதை குறிக்கிறது.

**வேண்டுகோள்**

1. மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங்களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது நமக்கும் மற்றவர்களுக்கும் பெருநலன் தரும்.

2. அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கரியமாக கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது ஒவ்வொரு மாதமும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகவும், தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த வெகுமதியாகவும் அமையும்.

3. அன்பர்கள் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது மிகப் பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

4. புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.


தொலைபேசி :
71231



விவரங்களுக்கு :
ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : சென்னை-600 004



# எங்கள் தமிழ் நூல்கள் வெளியீடு

ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004.

### I. ஸ்ரீராமகிருஷ்ணர்

| | ரூ. | பை. |
|---|---|---|
| ஸ்ரீராமகிருஷ்ணரும் அவருடைய சீடர்களும் | 11 | 00 |
| ஸ்ரீராமகிருஷ்ணரது திவ்விய சரிதப் பாடல் | 5 | 50 |
| ஸ்ரீராமகிருஷ்ணர் சரிதம் | 3 | 50 |
| ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேச மொழிகள் | 15 | 00 |
| ஸ்ரீராமகிருஷ்ண உபநிஷதம் | 4 | 00 |
| ஸ்ரீராமகிருஷ்ணர் சொன்ன கதைகள் | 4 | 00 |
| குருதேவர் வாக்கியம் | 1 | 25 |
| ஸ்ரீராமகிருஷ்ணரின் கதை | 0 | 35 |
| பாப்பாவுக்கு ராமகிருஷ்ணர் (மூவண்ணப் படங்களுடன்) | 4 | 00 |
| ஸ்ரீராமகிருஷ்ணசகஸ்ரநாமாவளிகள் | 3 | 00 |
| ஸ்ரீராமகிருஷ்ணர் நீதிகதைகள் | 4 | 00 |

### II. ஸ்ரீ சாரதாதேவியார்

| | ரூ. | பை. |
|---|---|---|
| அன்னை ஸ்ரீ சாரதாதேவியார் | 12 | 00 |
| ஸ்ரீ சாரதாதேவியார் அவரது வரலாறும் திருவாக்கும் | 10 | 00 |
| ஸ்ரீ சாரதாதேவியாரது சரிதம் | 3 | 00 |

### III. சுவாமி விவேகானந்தர்

| | ரூ. | பை. |
|---|---|---|
| விவேகானந்தரின் அறிவுரைகள் | 1 | 50 |
| சுவாமி விவேகானந்தர் (ரா. கணபதி) | | |
| ,, அட்டை பைண்டு | 30 | 00 |
| ஸ்ரீ விவேகானந்தர் சரிதம் | 4 | 00 |
| சிறுவர்களது விவேகானந்தர் | 2 | 00 |
| விவேகானந்தர் (மூவண்ணப் படங்களுடன்) | 2 | 50 |
| சுவாமி விவேகானந்தரின் சம்பாஷணைகள் | 6 | 00 |
| ,, ,, காலிகோ | 7 | 00 |
| இந்தியப் பிரசங்கங்கள் | 10 | 00 |
| இந்தியப் பிரசங்கங்கள் (காலிகோ) | 15 | 00 |
| கர்மயோகம் | 6 | 00 |
| பக்தியோகம் | 1 | 50 |
| ராஜயோக உரைகள் | 2 | 50 |
| நமது தாய்நாடு | 2 | 00 |
| தியானமும் அதன் முறையும் | 3 | 00 |
| நம்மவர் நாட்டு ஞான வாழ்க்கை | 1 | 00 |
| கல்வி (அச்சில்) | | |
| பாரதப் பெண்மணிகள் | 2 | 50 |
| தற்கால இந்தியா | 1 | 00 |
| சிகாகோ பிரசங்கம் | 1 | 00 |
| எனது வாழ்வும் பணியும் | 0 | 85 |
| எனது போர்முறை | 0 | 75 |
| எனது குருநாதர் | 2 | 50 |
| எல்லாவற்றிலும் இறைவனைக் காணல் (அச்சில்) | | |
| விவேகானந்தர் பாதையிலே | 1 | 00 |

### IV. இதர நூல்கள்

| | ரூ. | பை. |
|---|---|---|
| சுவாமி ராமகிருஷ்ணானந்தர் | 3 | 50 |
| மகான் துர்க்காசரண நாகர் | 1 | 50 |
| திரு அருள் மொழி | 6 | 00 |
| திருக்கயிலாயகிரி யாத்திரை | 3 | 00 |
| பக்தி மார்க்கம் | 2 | 00 |
| அருள்நெறிக் கதைகள் | 5 | 00 |
| பக்திக் கதைகள் | 4 | 50 |
| ஆன்மிகக் கதைகள் | 4 | 50 |
| நாரதர் கலகம் | 4 | 75 |
| அத்யாத்ம ராமாயணம் | 14 | 00 |
| கடோபநிஷதம் (நாடகம்) | 2 | 00 |
| ப்ரச்னோபநிஷதம் (நாடகம்) | 2 | 00 |
| பஜனாவளி | 11 | 00 |
| ஆத்ம நிவேதனம் | 3 | 00 |
| நடராஜ வடிவம் (அச்சில்) | | |
| ஸ்ரீராம நாம ஸங்கீர்த்தனம் | 0 | 20 |
| ஆராத்ரிகம் | 0 | 50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண மடமும் சங்கமும் | 2 | 00 |

### V. முரசு நூல்கள் (பாக்கெட் சைஸ்)

| | ரூ. | பை. |
|---|---|---|
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் ஞானமுரசு | 0 | 80 |
| ஸ்ரீ சாரதா தேவியாரின் அன்பு முரசு | 0 | 80 |
| ஸ்ரீ விவேகானந்தரின் வீர முரசு | 1 | 00 |
| ஸ்ரீ கிருஷ்ணரின் யோக முரசு | 0 | 80 |
| ஸ்ரீ சங்கரரின் வேதாந்த முரசு | 1 | 00 |
| புத்தரின் அற முரசு | 0 | 80 |

**ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் சந்தாதாரர்களுக்கு, சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் எல்லா வெளியீடுகளின்மீது 5% கழிவு தரப்படும். நூல்களை அனுப்புமாறு எழுதும் கடிதங்களில் சந்தாதாரர்கள் தங்களின் சந்தா எண்ணையும் கழிவு நீக்கி நூல்களை விற்பனைக்குப் பெற விரும்புவதையும் குறிப்பிடக் கோருகிறோம்.**

### சுவாமி விவேகானந்தரின் ஞானதீபம்: சுடர்கள் 1-10

சுவாமி விவேகானந்தர் பேசியவை, எழுதியவை அனைத்தும் 10 தொகுதிகளாக வெளியிடப்பட்டன. அவற்றுள் 5. 8, 10 ஆகிய மூன்று தொகுதிகளும் கைவசம் உள்ளன: ஏனைய மூன்று தொகுதிகளும் விற்பனைக்குக் கிடைக்கும்:

ஒவ்வொரு பகுதியும் 500 பக்கங்களுக்குக் குறையாதது.

சாதா பைண்டு விலை ரூ. 5-00 — காலிகோ பைண்டு ரூ. 6-50



# ஸ்ரீராமகிருஷ்ணமடம், சென்னை-600 004

**1983 செப்டம்பர் & அக்டோபர் மாத நிகழ்ச்சிகள்**

4-9-83 ஞாயிற்றுக்கிழமை ஸ்ரீ கிருஷ்ண ஜயந்தி பொதுக்கூட்டம்
மாலை 5-30 மணிக்கு தலைவர்: சுவாமி பீதாம்பரானந்தர்
பேசுபவர்: பிரேமா பாண்டுரங்கன்

6-9-83 செவ்வாய் சுவாமி அத்வைதானந்த ஜயந்தி
18-9-83 ஞாயிறு அந்தர்யோகம்
1-10-83 சனிக்கிழமை சுவாமி அபேதானந்த ஜயந்தி
6-10-83 வியாழன் சுவாமி அகண்டானந்த ஜயந்தி
21-10-83 வெள்ளி ஸ்ரீ ஸ்ரீ லட்சுமி பூஜை

**நவராத்திரி விழா-துர்க்காபூஜை நிகழ்ச்சிகள்**

22-10-83 வியாழன் மகா சப்தமி (மாலை 5-30 மணிக்கு ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம அர்ச்சனை நடைபெறும்.)
14-10-83 வெள்ளி மகா அஷ்டமி
15-10-83 சனி மகா நவமி
16-10-83 ஞாயிறு விஜயதசமி (மாலை வழிபாட்டிற்குப் பிறகு சாந்தி ஜலம்)
செப்டம்பர் 3, 17 & அக்டோபர் 2, 17 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

**சத் சங்கம்:** ஞாயிறுதோறும் மாலை 4 மணிமுதல் 5-30 மணி வரை

1. ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம்—வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள் (செப்டம்பர் 11 & அக்டோபர் 2)
2. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்—வி. எஸ். வி. குருஸ்வாமி சாஸ்திரிகள் (செப்டம்பர் 25 & அக்டோபர் 9)
3. ராமாயணம்—ஆர். கோதண்டராமன் (அக்டோபர் 23, 30)

மாலை 5-30 மணி முதல் 6-30 வரை சுவாமி பீதாம்பரானந்தர் 'ஸ்ரீமத் பாகவதம்' என்ற தலைப்பில் ஞாயிற்றுக்கிழமைகளில் ஆங்கிலத்தில் உரை நிகழ்த்துவார்.

**மடத்தின் சார்பாக வழக்கமாக சென்னையில் நடைபெற்று வரும் வாரநாட்களில் நடைபெறும் சொற்பொழிவுகள், மற்றும் வேறு சில நிகழ்ச்சிகள் சொற்பொழிவுகள் அனைத்தும் செப்டம்பர் & அக்டோபர் மாதங்களிலும் எப்போதும்போல் நடைபெறும்.**

# ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுதமொழிகள்

எதிர்பார்த்திருந்த இரண்டாம் பகுதி வெளிவந்து விட்டது.

* 760 பக்கம் * டெம்மிசெஸ் * அழகிய காலிகோ அட்டை * பிளாஸ்டிக் உறை

**சலுகை விலை ரூ. 70/ (மூன்று பகுதிகள்)**

ஆன்மிக வாழ்க்கைக்கு வேண்டிய அனைத்தும் அடங்கிய ஓர் உன்னதமான நூல். உலக வாழ்வில் சிக்கி, அல்லலுற்று, மீள வழியறியாது திகைக்கும் மக்களுக்கு ஒரு வழிகாட்டி.

ஜனவரி மாதத்தில் மூன்றாவது பகுதி (சுமார் 750 பக்கங்கள்) வெளிவந்துவிடும் என்று எதிர்பார்க்கிறோம். அப்பொழுது ஒரு செட் விலை ரூ. 100.

எம். ஓ., செக், டிராப்ட் அனுப்ப வேண்டிய முகவரி:—



**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்**
16, ஸ்ரீராமகிருஷ்ண மடம் ரோடு,
மயிலாப்பூர், சென்னை-600 004

# ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் ஆச்ரமம்

**26, துரைசுவாமி ரோடு, தியாகராய நகர், சென்னை-600 017**

50 வருடங்களுக்கு முன்பு 1932-ஆம் ஆண்டில் 'ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் பள்ளிகள்' என்ற பெயரில் இந்த நிறுவனம் துவக்கப் பெற்றது, இப்போது இந்த நிறுவனம் பின்வரும் கல்வி நிலையங்களை நடத்தி வருகிறது.

| | | மாணவர் எண்ணிக்கை |
|---|---|---|
| ஒரு ஹையர் செகண்டரி பள்ளி | ... | 2751 |
| இரண்டு உயர்நிலைப் பள்ளிகள் | ... | 2274 |
| மூன்று பிரைமரிப் பள்ளிகள் | ... | 1687 |
| இங்கிலிஷ் மீடியம் நர்சரிப் பள்ளி | ... | 687 |

இங்குள்ள மாணவர் விடுதியில் 115 மாணவர்கள் உள்ளனர். இங்கு இந்த நிறுவனத்தைச் சேர்ந்த நூலகங்களில் சுமார் 50,000 நூல்கள் இருக்கின்றன. இந்தக் கல்வி நிறுவனம் தென் சென்னைப் பகுதியில் அரிய தொண்டு செய்து வருகிறது.

1965-இல் இலவசக் கல்வித் திட்டம் ஆரம்பிக்கப்பட்டதிலிருந்து ஆசிரியர்களுக்குச் சம்பளம் தரும் பொறுப்பை அரசு மேற்கொண்டது. ஆசிரியர் சம்பளம் தவிர, கட்டிடங்களைப் பழுது பார்த்தல், கட்டிட வரி, அச்சுக்கூலி, தொலைபேசி, மின் கட்டணம், கல்வி நிறுவனத்திற்குத் தேவையான சாதனங்கள் போன்றவற்றினால் ஏற்படும் செலவுகளுக்கு இந்த நிறுவனம் பொதுமக்களிடமிருந்தே நிதியுதவியை எதிர்பார்க்க வேண்டியிருக்கிறது.

ஆகவே இந்த நிறுவனம் தன் பணியைத் தொடர்ந்து நடத்தும் பொருட்டு, பொதுமக்களும் பொதுநலத் தொண்டில் ஈடுபட்டுள்ள அமைப்புக்களும் தாராளமாக நன்கொடை வழங்கி உதவும்படி இந்த ஆச்ரமத்தின் செயலாளர் கேட்டுக் கொண்டுள்ளார்.

# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

தொகுதி 63 | செப்டம்பர்—1983 ருதிரோத்காரி ஹு புரட்டாசி மீ | இதழ் 9

பொருளடக்கம்



எழுத்தாளர்களிடமிருந்து நமது பத்திரிகைக்கு ஏற்புடைய கதை, கட்டுரை, பொன்மொழிகள், தகவல்கள் முதலியன வரவேற்கப்படுகின்றன.—ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

## ஆதரவு தாரீர்!

அன்புள்ளம் கொண்ட வாசகருக்கு,

கடவுளின் கிருபையை முன்னிட்டு எழுதுவது. வணக்கம் ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் பத்திரிகையைப் பலரும் படித்துப் பயன்பெறச் செய்வது ஒரு நல்ல தெய்விகத் தொண்டாகும்.

உங்கள் ஊரிலுள்ள உயிர்நிலைப் பள்ளிகளுக்கு, நீங்கள் படித்த உயர்நிலைப் பள்ளிக்கு, உங்கள் ஊரிலுள்ள பொதுநூலகத்திற்கு ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் அனுப்புவதற்குத் தாங்கள் சந்தா செலுத்தலாம். தங்கள் நன்கொடையாக அமையும் அதன்மூலம் பலரும் விஜயத்தைப் படிக்கும் வாய்ப்பு ஏற்படும்.

விருப்பமுள்ள அன்பர்கள், சத்சங்கங்களுக்கும் பொது நூலகங்களுக்கும் விஜயம் பத்திரிகையை அனுப்புவதற்குத் தாங்களே பணம் செலுத்தலாம். உதாரணமாக, ஒருவர் ரூ. 150 அனுப்பினால் 10 சத்சங்கங்களுக்கு ஒரு வருடத்திற்கு விஜயம் அனுப்பப்படும். அவ்விதம் பத்திரிகை அனுப்பப்படும் சத்சங்கங்களின் முகவரிகள் பணம் அனுப்பியவருக்குத் தெரிவிக்கப்படும். அல்லது தாங்களே பத்திரிகை அனுப்ப வேண்டிய முகவரிகளைக் குறிப்பிட்டும் பணம் அனுப்பலாம்.

—**ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்**
ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை. —திருமூலர்

यतो बुद्धिरज्ञाननाशो मुमुक्षोर्यतः
सम्पदो भक्तसन्तोषिकाः स्युः ।
यतो विघ्ननाशो यतः कार्यसिद्धिः,
सदा तं गणेशं नमामो भजामः ॥

யதோ புத்திரஜ்ஞானநாசோ முமுக்ஷோர்
யத: ஸம்பதோ பக்த-ஸந்தோஷிகா: ஸ்யு: ।
யதோ விக்னநாசோ யத: கார்யஸித்தி:
ஸதா தம் கணேசம் நமாமோ பஜாம: ॥
—கணேசாஷ்டகம்

# பிரார்த்தனை

எவரிடமிருந்து மோட்சத்தை விரும்புகிறவருக்கு அஞ்ஞானம் விலகி ஞானம் உண்டாகிறதோ, எவரிடமிருந்து பக்தர்களுக்கு மகிழ்ச்சி அளிக்கும் செல்வங்கள் உண்டாகின்றனவோ, எவரிடமிருந்து இடையூறுகள் விலகுமோ, எவரிடமிருந்துகாரியசித்தி ஏற்படுமோ, அந்தக் கணபதியை எப்போதும் வணங்குகிறோம்; சேவையும் செய்கிறோம்.

களியானைக் கன்றைக் கணபதியைச் செம்பொன்
ஒளியானைப் பாரோர்க்கு உதவும்—அளியானைக்
கண்ணுவதும் கைத்தலங்கள் கூப்புவதும் மற்றவன்றாள்
நண்ணுவதும் நல்லோர் கடன்.

—மூத்த விநாயகர் திருவிரட்டைமணிமாலை

# விநாயகர்

மைதிலி வேணுகோபால்


பால கணபதி

விநாயகர் என்றுமே பொதுத் தெய்வமாகத்தான் விளங்கி வருகிறார்.

கோவில்களில் முதலில் இருப்பது விநாயகர் சந்நிதிதான். முதலில் விநாயகரைப் பூஜித்துவிட்டுத்தான் கோவிலுக்குள்ளே செல்ல வேண்டும்.

மஞ்சள் பொடியில் விநாயகரைப் போல உருவம் செய்து வணங்கிய பிறகுதான் பூஜைகள், யாகங்கள் செய்வது வழக்கம்.

விநாயகருக்குத்தான் எத்தனை உருவங்கள்! எத்தனை பெயர்கள்! ஆனந்த நடமிடும் விநாயகர், அமர்ந்துள்ள விநாயகர், நின்றுள்ள விநாயகர், சயன விநாயகர் என்று பலப் பல வடிவங்கள்! அதே போன்று பலப் பல பெயர்கள்!

யானைமுகம், மனித உடல், இடைக்குக் கீழே பூதகணம் என்ற தோற்றம் உடையவர் விநாயகர். அவர் மனிதனல்ல, மிருகம் அல்ல, பூதகணமும் அல்ல; எல்லாமே அவர்தாம் என்ற தத்துவத்தை அவரது தோற்றம் உணர்த்துகிறது.

சில இடங்களில் விநாயகருக்கு முக்கண் வரைகின்றனர். சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய மூன்றுமே அவரது முக்கண்கள்.

இரண்டு கண்கள் வரையும்போது கண்கள் சிறியவையாக இருக்கும். வரம் கேட்கும் யாரையும் விநாயகர் உற்றுப் பார்ப்பதில்லை. அவனை உற்றுப் பார்த்தால், அவனது குற்றங்கள் எங்கே தெரிந்துவிடுமோ, வரம் கொடுக்க முடியாமற் போய்விடுமோ என்றுதான் விநாயகர் சிறிய கண்களைப் பெற்றிருக்கிறார்.


சக்தி கணபதி


துவிஜ கணபதி


சித்தி கணபதி


தருண கணபதி


பக்தி கணபதி


வீர கணபதி

எல்லா அண்டங்களும் உலகங்களும் விநாயகருக்குள் அடக்கம். இதையே அவரது பெரும்பேழை வயிறு உணர்த்து கிறது.

தும்பிக்கையையும் சேர்த்து அவருக்கு ஐந்து கரங்கள். ஒரு கரம் பாசத்தை ஏந்தியுள்ளது. பாசமாவது பற்று. இந்தப் பாசத்தால்தான் நமக்குப் பிறப்பு என்ற வினை வருகிறது. ஆகவே இந்தக் கரம், படைக்கும் தொழிலை உணர்த்துகிறது. மற்றொரு கையில் அங்குசம். அது தீயதை அழிப்பது. இந்த உலக விவகாரங்களில் சிக்குண்டு அல்லலுறுபவர்களுக்கு அபயம் காட்டுகிறது மூன்றாவது கரம். நான்காவது கரம் அபய முத்திரையைக் காட்டுவதன் மூலம் மோட்சத்தைத் தருகிறது. ஐந்தாவது கரம்தான் தும்பிக்கை. வரம் தருவதை மறைமுகமாகக் காட்டுகிறது இந்தக் கரம்.

விநாயகரின் தந்தங்களைப் பதிஞானம், பாசஞானம் என்று பெரியோர் கூறுகின்றனர். சில விநாயக உருவங்களில் பாம்பு பூணூலாகவும், சில உருவங்களில் ஆபரணமாகவும் விளங்குகிறது. இந்தப் பாம்பு குண்டலினி சக்தியைக் குறிக்கும்.

நெற்றியில் குட்டிக்கொள்வதும், தோப்புக்கரணம் போடுவதும் விநாயகருக்கு மட்டுமே செய்யப்படும் தனி வழிபாட்டு முறைகள்.

ஒரு சமயம் அசுரர்கள், தேவர்களையும் சாதுக்களையும் தலையில் குட்டிக் கொள்ளச் சொன்னார்கள். தோப்புக் கரணம் போடச் சொன்னார்கள்.


உச்சிஷ்ட கணபதி


விக்ன கணபதி


க்ஷிப்ர கணபதி


ஹேரம்ப கணபதி


லட்சுமி கணபதி


மஹா கணபதி

விநாயகர் அசுரர்களை ஒழித்துக்கட்டினுர். எனவே விநாயகரின் அந்த லீலையை நினைவுபடுத்திக் கொண்டாடும் வகையில் குட்டிக் கொள்வதையும் தோப்புக் கரணம் போடுவதையும் அனைவரும் விநாயகருக்குச் செய்ய ஆரம்பித்தனர்.

இவற்றினுல் வேறு சில நன்மைகளும் உள்ளன. நெற்றிப் பொட்டுக்களில் குட்டிக்கொள்வதனுல் சுஷும்ன நாடி சுறுசுறுப்படைய, குழப்பம் போய்த் தெளிவு பிறக்கிறது. தோப்புக்கரணம் சிறந்த தேகப்பயிற்சியாக அமைகிறது.

பெரிய உருவம் படைத்த விநாயகருக்கு மிகச் சிறிய பிராணியான மூஞ்சூறுதான் வாகனம். விநாயகர் அணுவுக்குள் அணுவாகவும் இருப்பார்; மஹத் எனப்படும் பெரியதுக்குப் பெரியதாகவும் இருப்பார் என்பதை அவரது மூஞ்சூறு வாகனம் காட்டுகிறது.

எளிமையாக எப்போதும் கிடைக்கும் பொருள்களே விநாயகரின் பூஜைக்குப் பயன்படுகின்றன. அறுகம்புல், எருக்கம் பூ, வாழைப்பழம், வன்னி இலை, சுண்டல், கொழுக்கட்டை ஆகியவையே அவருக்குப் போதும்.

# ராமதாசர்



சிவாஜியின் குருவாக விளங்கியவர் சமர்த்த ராமதாச சுவாமிகள்.

ராமதாசர் ஒவ்வொரு நாளும் சில வீடுகளில் பிக்ஷை வாங்கப் போவது வழக்கம். ஒவ்வொரு வீட்டு வாசலிலும் நின்று சுலோகங்களைக் கூறுவார்.

ஒரு நாள் ஒரு வீட்டுக்குப் போனுர். அந்த அம்மையார் சாணமிட்டு வீடு மெழுகிக்கொண்டிருந்தார். தம் வீட்டு வாசலில்


விஜய கணபதி


நிருத்த கணபதி


ஊர்த்துவ கணபதி

குமரக்கடவுள் தந்தைக்கு உபதேசம் செய்து, சிவகுரு என்ற பெயர் பெற்ருர். இந்தச் சிவகுருவுக்கும் குருவாக விளங்கிஞர் விநாயகர். மாங்கனி பெற்றவரும், அர்த்தநாரீசுவரர் தத்துவத்தை எடுத்துச் சொன்னவரும் இவர்தாம்.

வடநாட்டில் விநாயகருக்குச் சித்தி, புத்தி என்ற இரு தேவியரை வைத்து வணங்குகின்றனர். ஆனுல் வங்காளத்திலும் தமிழ்நாட்டிலும் அவர் பிரம்மசாரிதாம். சித்தி, புத்தி என்ற இரண்டு தத்துவங்களையே விநாயகரின் தேவியர் என்று உருவகமாகச் சொல்லியிருக்கிருர்கள்.

மராட்டிய மண்ணில் விநாயக சதுர்த்திபூஜை அரசாங்க விழாவாகப் பெரிய அளவில் கொண்டாடப்படுகிறது. மக்கள் போட்டி போட்டுக்கொண்டு இந்த விழாவைக் கொண்டாடுகின்றனர். மகாராஷ்டிரத்தில் இப்படிச் சதுர்த்திபூஜை கோலாகலமாகக் கொண்டாட ஏற்பாடு செய்தவர் பாலகங்காதர திலகர் ஆவர்.

ஆவணிமாதம் சுக்கிலபட்ச நான்காம் திதியான சதுர்த்தியில் விநாயகரை நாம் பூஜித்து மங்களம் பெறுவோமாக.



சுவாமிகள் வந்து நின்றதும், என்ன காரணத்தாலோ சீற்றமடைந்து தம் கையிலிருந்த சாணிச் சுருணையை, மெழுகிக் கொண்டிருந்த துணியை, அவர்மீது வீசிவிட்டார். சுவாமிகள் பதில் எதுவும் பேசாமல் அதனைக் கையில் எடுத்துக்கொண்டார். ஆசிரமத்துக்கு வந்தார்.

அந்தத் துணியை நன்ருக அழுக்குப் போகக் கசக்கினுர்; காய வைத்தார்.

பிறகு அதில் இருந்த நூல்களையெல்லாம் தனித்தனியே எடுத்து விளக்குத் திரியாக ஆக்கி, சுவாமி சந்நிதிக்குச் சென்று அதைக் கொண்டு விளக்கு ஏற்றிவிட்டு, ''ராமா! அந்த அம்மையாருக்கு என்ன குறையோ கோபமோ தெரியவில்லை. அவளது வாட்டத்தைப் போக்கு'' என்று பிரார்த்தித்தார்.

—இராம. கோபாலன்



மாணிக்கவாசகர் குயிலைப் பார்த்துப் பேசுகிறார்—

குயிலே, உன்னுடைய வாய் சீரிய வாய்; நீ குழறினாலும் பேசினாலும் எங்களுக்கு மதுரகீதமாக இருக்கும். நீ அழுதாலும் அது எங்களுக்குப் பாட்டைப் போலத்தான் இருக்கிறது. 'இனியவர் என் சொலினும் இன்சொல்லே' என்பார்கள். அது போல நீ எது பேசினாலும் அது எங்களுக்கு மதுரநாதகீதம். அந்தக் கீதம் இசையினிமை உடையதாக இருக்கிறது. அதோடு பொருளினிமையும் சேர்ந்தால் எப்படி இருக்கும்? பொற்பூவுக்கு மணம் சேர்ந்தாற் போல அல்லவா இருக்கும்? சாமானியப் பொருளினிமை அன்று; எல்லாப் பொருளுக்கும் மேலான பரம்பொருளைப்பற்றிப் பாடுவாயானால் உனக்குப் புண்ணியம் உண்டு; கேட்கின்ற எங்களுக்கும் பக்தியுணர்ச்சி பொங்கும்; அவ்வாறு கூவுவாயா?

# பெருந்துறை மேய பிரான்

அந்தப் பரம்பொருளைப்பற்றிச் சொல்கிறேன், கேள். இந்த அற்புதமான அழகிய ஏழுலகமும் அவனைத் துதிக்கின்றன. பிற செல்வர்கள் இன்று வந்து நாளைக்கு மறைபவர்கள். அவர்கள் ஏத்தும் துதியும் அவர்களோடு மறைந்து போகின்றன. இறைவனாகிய பரம்பொருளோ என்றும் உள்ளவன்; அவனை எல்லாக் காலத்திலும் பெரியோர்கள் ஏத்துகிறார்கள். அவனுக்குத் தனியே வடிவம் இல்லை. எல்லா உருவமும் அவனுடைய உருவம்தான். தன் அடியார்களுக்குச் சில சமயங்களில் சில கோலங்களை மேற்கொள்கிறான். அவனுக்கென்று தனி உருவம் இல்லை. அவன் இல்லாத உருவமும் இல்லை. எவ்வுருவும் தன் உருவம் ஆனவன் அவன்.

ஏர்தரும் ஏழுல கேத்த எவ்வுருவும்
தன் உருவாய்.

இராவணனுடைய மனைவி மண்டோதரி உண்மையான சிவபக்தை. இராவணனும் சிவபக்தனாக இருந்தாலும் அது போலியான சிவபக்தி. எவ்வுருவும் தன் உருவாகிய சிவபெருமானிடத்தில் உண்மையான பக்தி இருந்தால் அவன் சர்வ ஜீவ தயாபரனாக, அன்பே உருவமாக இருந்திருப்பான். ஆனால் இராவணனோ மிகக் கொடியவன். அவனுக்கு மனைவியாக வாய்த்தாலும் மண்டோதரி அழகும் நற்குணமும் நிரம்பியவள். முள் அடர்ந்த கருவேல மரத்தில் முல்லைக் கொடி படர்ந்தால் அதனை இறுகப் பற்றிக்கொள்ளும். கொடியின் இயல்பு அது. ஆனால் அதில் முல்லைமலர்தான் பூக்கும்; கருவேலம்பூப் பூக்காது. முல்லை மலரின் தூய வெண்மையும் மணமும் அதில் விரவியிருக்கும். அது போல, கற்பும் நற்குணமும் நிரம்பியவள் மண்டோதரி; அவளை வண்டோதரி என்றும் சொல்லுவர். அவள் கடல் சூழ்ந்த தென் இலங்கையில் இராவணனின் அந்தப்புரத்தில் இருந்தாள். முள்மரக் காட்டில் ஒரு தனி முல்லைக் கொடி போல அவள் விளங்கினாள்.

அவளுடைய பக்திக்கு இரங்கி இறைவன் அவளுக்கு அருள் செய்தார். இராவணனால் பெற்ற இன்பம் சிற்றின்பம். இறைவன் அருளியதோ

கி. வா. ஜகந்நாதன்





பேரருள் இன்பம். அரக்கியாயிற்றே, மாபெரும் பாவியாகிய அரக்கனின் மனைவியாயிற்றே என்று எண்ணவில்லை. அவளுடைய தூயபக்திக்கு அவன் இரங்கி அருள் புரிந்தான்; பேரருள் இன்பம் அளித்தான். காட்டுச் செடிக்கும் மழை பெய்தது போல் இறைவன் அருள்மழை பொழிந்தான்.

**ஆர்கலிசூழ் தென்இலங்கை அழகமர்வண்**
**டோதரிக்குப்**
**பேரருள் இன்பம் அளித்த.**

அவன் பல தலங்களில் எழுந்தருளி யிருக்கிறான், எங்கும் நிறைந்தவனானாலும் அன்பர்கள் கண்டு களித்துப் பூசித்து வழி படவேண்டும் என்பதற்காக அவ்வாறு எழுந்தருளியிருக்கிறான். அங்கே மேவிய பெருமானை வரும்படி கூவுவாயாக. தென்பாண்டி நாட்டிலே எழுந்தருளிய அவனைக் கூவுவாயாக. உன் பாட்டால் பெரும் பயன் விளையும்.

**ஏர்தரும் ஏழுல கேத்த எவ்வுருவும் தன்**
**உருவாய்**
**ஆர்கலிசூழ் தென்னிலங்கை அழகமர்வண்**
**டோதரிக்குப்**
**பேரருள் இன்பம் அளித்த பெருந்துறை**
**மேய பிரானைச்**
**சீரிய வாயாற் குயிலே, தென்பாண்டி**
**நாடனைக் கூவாய்.**

[குயிலே, அழகுடைய ஏழுலகமும் புகழ்ந்து வணங்க, எல்லா உருவங்களும் தன் உருவாகி, கடல் சூழ்ந்த தென்னிலங் கையில் இருந்த அழகுடைய மண்டோ தரிக்குப் பேரருளாகிய இன்பத்தை வழங்கிய, திருப்பெருந்துறையில் எழுந் தருளிய சிவபெருமானை, சிறப்பான வாயினால் அந்தத் தென்பாண்டிநாடனை வரும் வண்ணம் கூவுவாயாக. ஏர்-அழகு; ஏற்றம். ஆர்கலி-கடல். வண்டோதரி- மண்டோதரி; இராவணன் மனைவி.]



வேதங்கள், உபநிஷதங்கள், ஸ்ரீமத்பாகவதம் மற்றும் புராணங்கள் ஆகியவற்றின் அடிப்படை உண்மைகளை நீங்கள் தெரிந்து கொள்ள விரும்பினால், முதலில் ஸ்ரீராமகிருஷ்ணரின் வரலாற்றையும் உபதேசங்களையும் படியுங்கள். காரிருளில் ஆழ்ந்திருந்த இந்தியாவின் எல்லாத் தார்மிகக் கொள்கைகளின்மீதும் ஒளிவெள்ளத்தைப் பாய்ச்சும் வகையில் அவரது வாழ்வும் வாக்கும் அமைந்துள்ளன. வேதங்களுக்கும் அவற்றின் லட்சியங்களுக்கும் உயிருடன் கூடிய விளக்கமே ஸ்ரீராமகிருஷ்ணர். ஒரு யுகம் முழுவதும் கடைப்பிடிக்க வேண்டிய இந்தியத் தேசிய தார்மிக அடிப்படைக் கொள்கைகளைப் பரமஹம்சர் தம் ஒரே வாழ்க்கையில் வாழ்ந்து காட்டியுள்ளார்.

உண்மையிலேயே ஸ்ரீராமகிருஷ்ணரின் அருளைப் பெற்றவர்களின் மனம் உலகவிஷயங்களில் உழலாது. ஸ்ரீராமகிருஷ்ணரின் திருவருளை ஒருவர் பெற்றார் என்பதற்கு உரிய அடையாளம் என்னவெனில், அந்த மனிதரிடம் பொன்னிலும் போகத்திலும் பற்று இராது. இந்தப் பற்றற்ற நிலை ஒருவரது வாழ்க்கையில் அமையாவிட்டால் அவர் ஸ்ரீராமகிருஷ்ணரின் அருளைப் பெற்றாரில்லை என்பதுதான் உண்மை.

# நான் கண்ட



வேதாந்தத்தை ஒவ்வொருவரிடமும் கொண்டு போய்ச்சேர்க்க வேண்டுமானால் அதற்கு மனித குலத்தின் மீது மிகுந்த அளவில் அனுதாபம் கொண்ட ஒருவர் தேவைப்படுகிறார். இதற்கு முழுத் தகுதியும் பெற்றவர் ஸ்ரீராமகிருஷ்ணரே. ஆதலால் நீங்கள் ஸ்ரீராமகிருஷ்ணரை ஒவ்வொருவர் முன்பும் வைக்கக் கடமைப்பட்டிருக்கிறீர்கள். இவரை ஒருவர் 'சாது' என்றோ 'அவதார புருஷர்' என்றோ ஏற்றுக் கொள்கிறாரா இல்லையா



என்பது முக்கியமன்று. மெய்ப்பொருளைப் பற்றிய உண்மை ஒரே ஒரு மதத்தில் மட்டும் அடங்கியில்லை; எல்லா மதங்களிலும் இது நின்று நிலவுகிறது என்பதை அனுபவ வாயிலாக உணர்ந்து உலகிற்கு முதன்முதலில் உணர்த்தியவர் ஸ்ரீராமகிருஷ்ணரே.

ஸ்ரீராமகிருஷ்ணரின் திருமுகம் குழந்தை போன்ற மென்மையையும், ஆழ்ந்த பணிவுடைமையையும், சிறந்த இனிமையையும் வெளிப்படுத்தக்கூடியதாக இருந்தது.

செறிந்த அறிவு, நிறைந்த அன்பு, தியாகம், கருணை, மனிதகுலம் முழுமைக்கும் தொண்டு செய்யும் பரந்த நோக்கம் ஆகியவற்றுக்கெல்லாம் ஓர் உருவமாகத் தோன்றியவரே பரமஹம்சர்.

சமுதாயத்தில் மிகவும் கடைப்பட்ட மனிதனுக்கும், ஆணுக்கும் பெண்ணுக்கும், ஏன், சிறுவர் சிறுமியர் அனைவருக்கும்கூட ஞானமும் பக்தியும் பெற உரிமை அளிக்கப்பட வேண்டும் என்பதே அவரது நோக்கம்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் திருவருளுக்குப் பாத்திரமான பல்லாயிரக் கணக்கானவர்கள் பெருந்தன்மை பெற்றுத் தெய்வநிலைக்கு உயர்த்தப் பட்டுவிட்டனர். அவரது தனிப்பெருங் கருணையின் ஒரு துளி, இரும்பு

# ஸ்ரீராமகிருஷ்ணர்

போன்ற உள்ளங்களையும் மாற்றிப் பொன்மனச் செம்மல்களாகப் புனிதப்படுத்திவிட்டதை நீ அறிவாயா?

நம் முன்னே ஒரு மகாபுருஷர் காட்சியளிக்கிறார். ஸ்ரீராமகிருஷ்ணர் என்ற இந்த மகாபுருஷரின் வாழ்க்கை, 'துவைதமும் அத்வைதமும் ஆன்மிக முன்னேற்றத்திற்கு அவசியமானவை' என்பதை வலியுறுத்துகிறது.

இந்தச் சக்தியுகத்தில் ஸ்ரீராமகிருஷ்ணரின் அன்பின் அரவணைப்பிலே அனைவரும் ஒன்றுபட்டுவிட்டனர். ஆணாகவோ பெண்ணாகவோ எவராக இருப்பினும் சரி, ஸ்ரீராமகிருஷ்ணரை அவர்கள் வழிபடுவார்களேயானால் அவர்கள் எவ்வளவுதான் தாழ்ந்தவர்களாக இருப்பினும் மிகமிக உயர்ந்தவர்களாக மாற்றப்படுவார்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணர் தாய்க்குலத்தின் இரட்சகர், பாமர மக்களின் பாதுகாப்பாளர், அனைவருக்கும் மீட்பு அளிக்க அவதரித்தவர்.

## சுவாமி விவேகானந்தர்

வேதாந்தச் சிந்தனை

# அஷ்டாவக்கிர கீதை

'ஹரிணீ'

அஷ்டாவக்கிர முனிவர் பின்வரும் வேதாந்த உண்மைகளை ஜனக மன்னனுக்கு உபதேசித்தார்—

அரசே! தூய உள்ளமும், புலனடக்கமும், பூரண திருப்தியும் உள்ளவன் எவனோ அவனே தனிமையில் எல்லையற்ற ஆனந்தத்தை அனுபவிக்கிறான்.

அவனுக்கு ஞானத்தின் முழுப் பயனும் யோகமுயற்சியின் நற்பயனும் நிச்சயமாகக் கிடைக்கின்றன. இந்த உண்மையை அறிந்தவன் உலக வாழ்க்கையில் ஒருபோதும் துன்புறமாட்டான். ஏனெனில், இந்தப் பிரம்மாண்டம் முழுவதும் அவனாலேயே வியாபிக்கப்பட்டிருக்கிறது அல்லவா!

இனிப்புச் சுவை கொண்ட ஈச்சங் குருத்தைச் சாப்பிட்டு இன்பம் அடைகிற யானை வேப்பிலையைச் சாப்பிட விரும்புமா? தனது ஆத்ம சொரூபத்திலேயே ஒன்றுபட்டு ஆனந்த பரவசமடைபவனுக்கு இந்த உலக சுகம் எதுவும் மகிழ்ச்சியோ இன்பமோ அளிப்பதில்லை.

அவன் தான் முன்பு எப்போதோ அனுபவித்த சுகபோகங்களையும் நினைப்பதில்லை. தான் அனுபவிக்காத இன்பங்களையும் பொருட்படுத்தாமல் உதாசீனனாகவே அவன் இருப்பான். இது போன்று ஆசைகள் இல்லாத ஒருவனை உலகில் பார்ப்பது மிகமிக அரிது. அன்பனே, கேள்! இந்த உலகில் விஷயசுகங்களில் ஆசையுள்ளவனையும் பார்க்கலாம். மோட்சத்தில் ஈடுபாடு கொண்ட முமுட்சுக்களையும் பார்க்கலாம். ஆனால் உலக சுகம், மோட்சசுகம் ஆகிய இரண்டிலுமே விருப்பமில்லாத சான்றோர்களைக் காண்பது அரிது. இத்தகைய ஆசைகள் அடங்கிய மகாபுருஷர்கள் மிகச் சிலராகவே காணக் கிடைப்பார்கள்.

மனம் அடங்கப்பெற்ற ஞானிக்கு அறம் பொருள் இன்பம் வீடு எனப்படும் நான்கு வகைப் புருஷார்த்தங்களிலும், வாழ்க்கை மரணம் என்பவற்றிலும் விருப்போ வெறுப்போ உண்டாவதில்லை.

அந்த மகாபுருஷன் இந்த உலகம் இருப்பதையும் வெறுப்பதில்லை, மறைந்து போக வேண்டும் என்று விரும்புவதுமில்லை. அத்தகைய மகாபுருஷன் தனக்கு எப்படிப்பட்ட வாழ்க்கை அமையப் பெற்றாலும் பரமானந்தமாகவே இருந்து வருவதைப் பார்க்கலாம்.

ஆகா! அவன் அல்லவோ பாக்கியசாலி!

துன்பங்கள் நிறைந்த, அஞ்ஞானமயமான இந்த உலக வாழ்க்கை நிலையற்றது, அடிக்கடி மாறுதலடையக் கூடியது; இந்த உண்மையை நன்கு அறிந்த மகாத்மாவான பாக்கியசாலி எப்போதும் ஆத்மாவிலேயே ரமிப்பவனாக, ஆனந்தமாக இருப்பான்.

ஞானத்தின் உச்சநிலையை அடைந்து, செய்ய வேண்டியதைச் செய்துவிட்ட (க்ருதக்ருத்யனாக) மனநிறைவுடன் ஞானி சுகமாக இருக்கிறான். மனம் அடங்கிவிட்ட நிலையில் தனது உலக வாழ்க்கையுடன் தொடர்பு கொண்ட எல்லாவற்றையும் கண்டும் கேட்டும் மோந்தும் அருந்தியும் தொட்டும் எப்

போதும் இன்பமாகவே இருந்து வருவான்.

வறண்டுபோன இந்த உலகம் என்ற பெருங்கடலிடம் அவனுக்கு எந்தப் பற்றுதலும் இருப்பதில்லை. ஆனுல் அவனுக்கு அதன்மீது விரக்தியும் இருப்பதில்லை.

புலனடக்கத்தினுல் செயல் உத்தேசம் எதுவுமற்ற அவனது பார்வை குறியற்றதாகவே தோற்றமளிக்கும்.

முற்றும் துறந்த இந்த ஞானி எங்கே சென்ருலும் எங்கே வசித்தாலும் தன் (ஆத்ம) நிலையிலிருந்து நழுவாமல் சுகம் பெறுவதை, பரவசநிலையில் தன்மயமாகித் திளைப்பதைக் காண முடியும்.

ஜனகா! எவ்வித வாசனைகளும் இல்லாதவனுக, ஆத்மாராமனுக விளங்கும் அந்த முக்த புருஷன் எதற்காகவும் கலங்கமாட்டான்.

மகிழ்ச்சியும் கோபமும் அவனிடம் அணுகா.

நிந்தனை செய்வது, புகழ்வது, கொடுப்பது, வாங்குவது போன்ற செயல்களும் அவனிடம் காணப்படுவதில்லை.

ஆண் பெண், ஆபத்து செல்வம், சுகம் துக்கம் ஆகிய எல்லாவற்றையும் ஒரேவிதமாகப் பார்க்கும் சமதிருஷ்டியுள்ள, பற்றற்ற அந்தத் தீரபுருஷனுக்கு வேறுபாடு (பேதம்) என்பதே தெரிவதில்லை.

அருகிலுள்ள அன்பான பெண்மணியும், அணுகி வரும் மரணமும்கூட அவனுக்கு மனச்சலனத்தை உண்டுபண்ணுவதில்லை. ஆகா! தன் நிலையிலிருந்து நழுவாத அவன் அல்லவா பாக்கியசாலி! அவன் அல்லவோ முக்த புருஷன்!

உலகச் சுழலில் அகப்பட்டுக்கொள்ளாத தீரபுருஷனுக்குக் கர்வம், தாழ்வு, வியப்பு, கருணை, மனக்குழப்பம், பிறருக்குத் தீங்கு விளைவிப்பது போன்ற எண்ணங்களும் இருப்பதில்லை.

நான், எனது என்ற எண்ணங்களற்றவனுக்கு உள்ளத்தில் ஆசைகள் தோன்றுவதே இல்லை.

எல்லா ஆசைகளும் நீங்கப்பெற்ற ஞானி புறத்தளவில் செயல்களைச் செய்த போதிலும் உண்மையில் செய்யாதவனே ஆகிருன்.

அரசே! மிகச் சிறந்த ஞானம் உதயமானவுடனே எல்லா விதமான (மனமாய) மயக்கங்களும் பிரமைகளும் கனவாகிவிடுகின்றன. அந்த அற்புத, சாந்த வடிவமான, ஆனந்தமே உருவான ஒளியை வணங்கிப் போற்றுவோமாக!

உலகப் பொருள்கள் எல்லாவற்றையும் சேகரித்து, எல்லையற்ற சுகபோகங்களையும் அனுபவித்து, செழிப்பான



வாழ்க்கை வாழ்ந்தபோதிலும் அவற்றை முற்றும் தியாகம் (அதாவது எல்லாவற்றையும் துறப்பது) செய்தாலன்றி உண்மையான (ஆத்ம) சுகம் கிட்டுவதில்லை.

அன்பனே! கடமை என்ற சூரிய ஒளியின் கடுமையான வெப்பத்தினுல் பொசுக்கப்பட்ட இதயத்துக்கு, இதமான சுகத்தையும் சாந்தியையும் அளிக்கக்கூடியது இந்த ஆத்மஞானம் என்ற அமுத மழையைத் தவிர வேறு என்னதான் இருக்கிறது?

இந்தப் பிரபஞ்சம் கற்பனை மாத்திரமே. உண்மையில் அது ஒன்றுமே இல்லை.

♣



# சர்வம் சக்திமயம்

உலக வழக்குப்படிச் சொல்வதானால் ஸ்ரீராமகிருஷ்ணருக்குத் திருமணம் ஆகியிருந்தது. ஆனால் அவரோ, சாதாரணமாகத் திருமணம் செய்துகொண்டிருப்பவர்களைப் போலத் தமது வாழ்க்கையை அமைத்துக்கொள்ளவில்லை.

ஆகவே திருமணமான அவர், மற்றவர்களைப் போல ஏன் குடும்ப வாழ்க்கையில் ஈடுபட்டுத் தமது மனைவியுடன் வாழவில்லை என்ற கேள்வியை ஓர் அன்பர் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் கேட்டார். அதற்குப் பரமஹம்சதேவர் பின்வருமாறு பதிலைச் சொன்னார்.

ஒரு நாள் விநாயகப்பெருமான் ஒரு பூனையோடு விளையாடிக்கொண்டிருந்தார். அப்போது அவருடைய கைநகம் பூனையின் முகத்தில் பட்டு ஒரு சிறிய கீறலை உண்டாக்கியது.

சிறிது நேரத்திற்குப் பிறகு விநாயகர் வீட்டுக்கு வந்தார். அப்போது தமது தாயாகிய பார்வதிதேவியின் கன்னத்தில் விரலால் கீறிய அடையாளம் ஒன்று இருப்பதைப் பார்த்தார். அதைப் பார்த்ததும், ‘உலகின் தாயாகிய அம்பிகைக்கு முகத்தில் கீறல் உண்டாக்கி ஊறு விளைக்கக்கூடியவர் யாராக இருக்



கக்கூடும்?' என்ற வியப்பு அவருக்கு ஏற்பட்டது. ஆகவே அவர், ''தாயே! உன் கன்னத்தில் இந்த வடு எப்படி ஏற்பட்டது?'' என்று கேட்டார்.

ஜகன்மாதா பதில் சொன்னாள்: ''குழந்தாய்! இது நீ செய்த காரியம் தான். உன் கைநகத்தின் கீறலால் ஏற்பட்ட வடுதான் இது''

தேவியின் பதிலைக் கேட்ட விநாயகப் பெருமான் திடுக்கிட்டுப்போனார். வியப்பு மேலிட அவர், ''எப்படியம்மா! உன்னை நான் ஒருபோதும் கீறியதாக எனக்கு நினைவு இல்லையே?'' என்று கேட்டார்.

''குழந்தாய்! இன்று காலையில் நீ ஒரு பூனையைக் கீறியதை மறந்துவிட்டாயா?''

''ஆமாம், கீறினேன். ஆனால் உன் கன்னத்தில் வடு எப்படி ஏற்பட்டது?''

''குழந்தாய்! இந்த உலகில் என்னைத் தவிர ஒன்றுமே கிடையாது. உலகில் உள்ள எல்லா உயிர்களிலும் நான் இருக்கிறேன். நானே உலகமாக ஆகியிருக்கிறேன். எல்லா உயிர்களாகவும் பொருள்களாகவும் சகல சிருஷ்டியாகவும் நானே விளங்குகிறேன். ஆகவே நீ யாரைத் துன்புறுத்தினாலும் உண்மையில் அது என்னைத் துன்புறுத்துவதாகவே அமையும்.''

பார்வதிதேவியின் பதிலைக் கேட்டதும் விநாயகப் பெருமானுக்குச் சொல்ல முடியாத ஆச்சரியம் ஏற்பட்டது. அதோடு தாம் ஒருவரையுமே திருமணம் செய்துகொள்ளப் போவதில்லை என்று உறுதியாக முடிவு செய்தார். ஏனென்றால் அவர் யாரைத் திருமணம் செய்துகொள்ள முடியும்? ஒவ்வொரு பெண்ணும் அவருடைய தாயே அல்லவா? இந்தப் பெரிய உண்மையை மனதில் கொண்ட விநாயகப் பெருமான் யாரையுமே திருமணம் செய்துகொள்ளவில்லை.

இந்தக் கதையைச் சொல்லிவிட்டு ஸ்ரீராமகிருஷ்ணர் சொன்னார்—''நானும் விநாயகரைப் போலவே இருக்கிறேன்; ஒவ்வொரு பெண்ணும் சாட்சாத் ஜகன்மாதாவாகிய தேவியாக இருப்பதை நான் பார்க்கிறேன்.'' ♣

# வாகனங்களின் தத்துவம்

ராஜம் ஜயராமன்

**கொடியேற்றம்**

முதல் நாள் திருவிழாவன்று கோயில்களில் கொடியேற்றம் நடைபெறுகிறது. எந்த ஆலயத்தில் கொடி ஏற்றப்படுகிறதோ அந்த ஆலய மூர்த்தியின் வாகனத்தைக் கொடியில் எழுதி அதற்குப் பூஜை செய்து, கொடி மரத்தின் உச்சியில் ஏற்றுவார்கள். தத்துவங்கள் தோன்றும் முறையைக் கொடியேற்று விழா விளக்குகிறது. சிவாலயங்களில் ரிஷபக் கொடி ஏற்றப்படுகிறது. கொடியில் காணப்படும் ரிஷபம் தர்மமாகவும், ஆன்மாவின் உருவமாகவும் எண்ணப்படுகிறது. ஆன்மாக்களையும் தர்மத்தையும் கீழ்நிலையிலிருந்து உயர்நிலைக்குக் கொண்டு செல்லும் இறைவனின் கருணையைக் கொடியேற்றத்தின் மூலம் அறிகிறோம். அதாவது ஆணவத்தின் ஆட்சி ஒழிந்து, சிவஞான ஆட்சியும் அதன் சைதன்யமான அருள், தயை, சாந்தி முதலியன ஓங்குவதையும் இது குறிக்கிறது.

பொதுவாக, இறைவன் எல்லா உயிர்களுக்கும் அருள் புரிகிறான். ஆயினும் இந்தப் பத்து நாட்களிலும் இறைவன் சிறப்பாக அருள் புரியக் காத்திருக்கிறான் என்பதைக் கொடி உணர்த்துகிறது. கொடியேற்றம் முதல் தீர்த்தவாரி வரையில் யாகசாலையில் யாகம் நடைபெறுவது ஸ்திதி என்ற காக்கும் தொழிலைக் குறிக்கிறது.

**வாகனங்களின் தத்துவம், விருக்ஷத்தடி சேவை**

முதல் நாள் இரவு, மரத்தடியில் சிவபெருமான் வீற்றிருப்பதாக விளங்கும் விருக்ஷ வாகனத்தில் பவனிவரச் செய்வார்கள். இதனை 'விருக்ஷத்தடி சேவை' என்பர். மாயையை வித்தாகவும், மரத்தின் கிளைகள் தத்துவங்களாகவும், இலைகள் உயிர் வர்க்கங்களாகவும் உள்ளன. இவற்றின் அடியில் இறைவன் இருந்து சிருஷ்டிக்கெல்லாம் வேர் போல் இருந்தருளுவதை இது உணர்த்துகிறது. இது சிருஷ்டிக் கோலமாகும்.

**இரண்டாம் நாள் வாகனம்-சூரியப் பிரபை, சந்திரப் பிரபை**

இரண்டாவது நாள் காலை மாலை முறையே சூரியப்பிரபை சந்திரப்பிரபை இவற்றில் இறைவன் எழுந்தருளும் திருக்காட்சி. இது ஸ்திதிக் கோலமாகும். காண்பானாகிய ஆன்மாவுக்கு, காட்டுவான் தான் என்பதை உணர்த்த, காணும் கண்ணுக்குக் கதிரொளியாய் நின்றதை உணர்த்துவதாகும். அன்றியும் சூரியனால் உலகத்திற்கு வெப்பம், மழை, அதன் மூலமாகத் தானிய விருத்தி உண்டாகிறது. அத்தகைய சூரியனைக் கொண்டு உலகத்தைக் காக்கும் இறைவனின் கருணையை இது உணர்த்துகிறது. சந்திரன் தன் தண்ணொளியால் உயிர்களுக்கு இன்பத்தை அளிக்கிறான். அதைப் போல் சந்திரப் பிரபையைக் கொண்டு உலக வெப்பத்தால் தவிக்கும் உயிர்களுக்கு இறைவன் சாந்தியை அளிக்கிறான் என்பதை இது உணர்த்துகிறது.

**மூன்றாம் நாள் வாகனம்—அதிகார நந்தி, மாலை பூத வாகனம்**

இது சங்காரக் கோலம் எனப்படும்

அழித்தல் தொழிலை உணர்த்துகிறது. அதிகார நந்தி மான், மழு, சதுர்புஜம், முக்கண் முதலியவற்ரேடு சாரூப்பிய பதவியைப் பெற்றவர். இவர் விஞ்ஞான கலர் என்னும் ஆன்மாக்களுள் சிறந் தவர். இவர் கயிலையில் சிவசந்நிதானத் தில் அதிகாரம் செலுத்துபவர். இதனுல் இவர் அதிகார நந்தி என்று பெயர் பெற்ருர். அன்றியும், ஆன்மாக்களுக்குக் கர்மத்திற்கு அனுகூலமான மரணு வஸ்தை விதிக்கிற சம்ஹாரத்தையும், பஞ்ச பூதங்களில் நின்று விளங்குபவர் தாமே என்பதையும் இந்த வாகனம் காட்டுகிறது.

**நான்காம் நாள் வாகனம்-நாகவாகனம்**

நாகம் நஞ்சையும் படத்தையும் மாணிக்கத்தையும் மறைத்து வைத் திருந்து, வேண்டும்பொழுது வெளிப் படுத்தி, தானும் வெளிவரும். அது போல் இறைவனும் தன்னை மறைத்துக் கொண்டு, வேண்டும்போது வெளிப் படுவதைக் காட்டும் திரோபவத்தை நாக வாகனம் உணர்த்துகிறது. மேலும், ஐந்துமுக நாகத்தைக் குண்டலினி சக்தி, சுழுமுனை நாடி முதலியவற்றிற்கும் ஒப்பிடுவது உண்டு.

**ஐந்தாம் நாள்-ரிஷப வாகனம்**

இது பசுக்களுக்கு (ஆன்மாக்களுக்கு)ப் பதி இறைவனே என்பதையும், அவன் தர்ம தேவதையை இட மாகக் கொண்டவன் என்பதையும் உணர்த்துவதாகும். நான்கு அறமான சமம், விசாரம், சந்தோஷம், சாது





சங்கம் என்பவற்றை நான்கு காலாகக் கொண்ட அற வடிவான ரிஷபம் போன்ற ஆன்மாவினிடம் பதியாகிய இறைவன் இடமாகக் கொண்டு அமர் வான் என்பதை இது குறிக்கிறது. இது அனுக்கிரகக் கோலத்தைக் குறிக்கும்.

**ஆரும் நாள்—யானை வாகனம்**

யானை வாகனத்தில் இறைவன் எழுந் தருளுவது லயக் கிரம சிருஷ்டிக் கோல மாகும். அதாவது ஒடுங்கும் முறை எனப்படும். உலகப் பொருள் அனைத்தும் ஒரே பிண்டமான யானையின் உடம்பு போலப் பருமனுய்க் கிடந்து இறைவ னிடம் ஒடுங்கும். அதிலிருந்து திரும்பத் தோன்றுவது லயத்தின் பின் சிருஷ்டி தொடங்குவதைக் குறிக்கும். யானையின் நான்கு கால்கள் பிண்டாகார உற்பவ ஜடத்வம், சுவாச சூட்சுமம், வாஜி ஜீவத்வம், பிராணுயாமம் ஆகியவற்றைக் குறிக்கின்றன. இவை யானையின் பருத்த உடல் போன்ற ஆத்ம ஞானத்தில் தோன்றித் தும்பிக்கை போன்ற சுழுமுனை நாடியில் நிலைநிற்கும். யானையின் மேல் வைக்கும் அம்பாரி முதலியன, வெளித் தோற்ற அகண்டா காரமாகும். அதாவது உற்பவ, சூட்சும, ஜீவ மாயா ஞானங்கள் ஆத்ம ஞானத் திலும், அவை ஈசுவர சைதன்யத்திலும், ஈசுவர சைதன்யம் பிரம்ம சைதன்யத் திலும் லயிக்கின்றன என்பதைக் குறிப்ப தாகும்.

**ஏழாம் நாள்—கைலாச பர்வத வாகனம்**

ஏழாம் நாள் இராவணனது உடம்பின் மேலுள்ள கைலாச பர்வதத்தில்



இறைவன் எழுந்தருளும் காட்சியாகும். இதனைக் கைலாச பர்வத வாகனம் என்பர். இராவணன் ஆணவபலம் முதிர்ந்த ஜீவான்மா. அவன் தனது ஆணவத்தால் கைலாச மலையைத் தூக்கி எடுக்க, சிவபெருமான் கால்விரலால் ஊன்ற, அவன் அலறி அழுது கைநரம் பால் வீணை உண்டாக்கிச் சாமகானம் செய்தான். பின்பு இறைவன் மகிழ்ந்து அவனுக்கு அருள் புரிந்தார். இது ஸ்திதி அல்லது காப்பாற்றுவதைக் குறிக்கும். இறைவனுக்குத் தீங்கு செய்தவனும் ஆணவம் நீங்கி வழிபடுவானாயின், அவனுக்கும் இறைவன் அருள் புரிவான் என்பதை இது உணர்த்துகிறது.

### எட்டாம் நாள்—குதிரை வாகன ஆரோகணம்

இது ஸம்ஹாரக் கோலமாகும். அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு கால்களையும், கிரியை, ஞானம் என்ற இரண்டு காதுகளையும், பரஞானம், அபரஞானம் என்ற இரண்டு கண்களை யும், விதியாகிய முகத்தையும், நிஷேத் மாகிய வாலையும், ஆகமங்கள் என்ற ஆபரணத்தையும், பிரணவத்தைக் கடி வாளமாகவும், உபநிஷதங்களைச் சேண மாகவும் கொண்ட வேதமாகிய குதிரை யில் இறைவன் பவனி வருகிறான் என் பதை இது உணர்த்துகிறது.

எட்டாம் நாள் திருவிழா அன்று மாலை யில் பிக்ஷாடனத் திருக்கோலமாகும். இது தாருகாவனத்து ரிஷிகளும் ரிஷிபத்தினி களும் ஆணவ மலத்தால் தாங்கள் சுதந்திரர் எனறு எண்ணிக் கடவுளை மறந்தனர். அவர்கள் பரதந்திரர்களே என்று உணர்த்த, இறைவன் பிக்ஷாடன மூர்த்தியாயச் செல்ல, ரிஷிபத்தினிகள் அவரது அழகில் மயங்க, விஷ்ணு மோகி னியாய்ச் செல்ல, அவரது அழகில் ரிஷிகள் மயங்க, இந்த இரண்டு செயல் களாலும் அவர்கள் பரதந்திரர்களே என்று உணரச் செய்து அனுக்கிரகித்த கோலமே பிக்ஷாடனக் கோலமாகும்.

### ஒன்பதாம் நாள்—தேர்த் திருவிழா

தேரின் அமைப்பு அண்ட பிண்டத் திற்குச் சமானம். விசுவ விராட் சொரு பமே எட்டு அடுக்குகளாகும். உச்சியில் இருக்கும் கலசம் சோடசாந்தம். அதற்கு அடுத்த கீழடுக்கு துவாதசாந்தம் எனவும், அதற்கு அடுத்தது மஸ்தக ஆதி ஸ்தானம் எனவும், அதற்கும் அடுத்தது மஸ்தக மத்திய ஸ்தானம் எனவும்,



அதற்கு அடுத்தது மஸ்தக அந்த ஸ்தானம் என்றும், அதற்கு அடுத்தது லலாட மத்திய ஸ்தானம் என்றும், அதை அடுத் தது புருவ மத்திய ஸ்தானம் என்றும், நடுவே தாங்கும் குத்துக்கால்கள் தத்துவக் கால்கள் என்றும், முன் மூன்று துறைகள் மூன்று கண்கள் என்றும், பின்னவை சிகையும் இட வலக் காதுகளு மாகும் என்றும், இறைவன் எழுந்தருளி யிருக்கும் கேடய பீடம் முப்பாழ் என்றும், சூரிய சந்திர கலைகள் குதிரைக ளாகவும், சாரதி அக்கினி கலையாகவும் விளங்குகின்றன என்று த்த்துவரீதியில் விளக்கம் தரப்பட்டுள்ளது.

எட்டாம் அடுக்குக் கண்ட ஸ்தானம் என்றும், அதை அடுத்தது இதய ஸ்தானம் என்றும், அதை அடுத்து நாபி, அதற்கு அடுத்த அடுக்கு குண்டலி ஸ்தானம் என்றும், பத்து சக்கரங்களும் தசவாயுக்கள் என்றும் காட்டி, இதற்குக் கர்த்தா தான் ஒருவனே என உணர்த்தி, இது அண்டதத்துவச் சொரூபமாய், பிண்டதத்துவச் சரீரமாயும் விளங்கும் எனவும் உணர்த்தி தசவாயு சக்கரத்தை நிறுத்த மலம் அசைவற்று அச்சுப் பட்டடை உந்திக் குண்டலியிலிருந்து நாபிக்கும், அதிலிருந்து கண்டத்திற்கும், அதிலிருந்து வாய்க்கும் ஏற்ற லயப் படுத்தி, முறையே ரதக் குதிரை என்ற நாசிக்கும், அங்கிருந்து கண்வழியாகவும் நடுவழியாகவும் மேல்நோக்கி, ஆறும் அடுக்காகிய புருவ மத்திக்கும் ஏற்றி லயப்பட்டுச் சும்மா இருந்தபடி இருக்கும் நித்தியசுகியாய் இருக்க வேண்டும் என்ற லயக் கிரமத்தைக் காட்டுகிறது. மேலும், தேர் திரிபுராதிகளைச் சிவன் சிரித்து எரித்து ஆன்மகோடிகளைக் காப்பாற்றிய ஸ்திதித் தொழிலுக்கும் அறிகுறியாகும்.

### பத்தாம் நாள்—தீர்த்தவாரி

காலையில் நடராஜர் திருவீதி உலா வருவார். இது பஞ்ச கிருத்தியங்களை உணர்த்தும். இவர் சபையை விட்டுப் புறப்படுவது சிருஷ்டியையும், அபிஷேகம் ஸ்திதியையும், கருஞ்சாந்து அணிதல், அலங்கார தீபாராதனை முதலியன சங்காரத்தையும், வெள்ளைச் சாந்துப்பொடி திரோபவத்தையும், வீதி வலம் வந்து மட்டையடி தரிசனம் அனுக்கிரகத்தையும் குறிக்கின்றன.

பத்து நாட்களில் இரண்டு பகுதிகளாக நடத்தப்படும் ஐந்தொழில்களும் பத்தாம் திருவிழா நாளில் ஒரே காலத்தில் ஒரே நாளில் தொகுத்துக் காட்டப் படுகின்றன.



இதன் பின்பு தீர்த்தவாரி நடை பெறும். பொங்கித் ததும்பிப் பூரண மாய் ஏக உருவாய்க் கிடக்கும் இறை இன்ப வாரிதியில் ஆன்மாக்கள் முற்றும் ஆழ்ந்து ஆனந்திப்பதைத் தீர்த்தவாரி உணர்த்துகிறது. இதனை மகாருத்ரபாத தீர்த்தம் என்பர்.

மேலே கூறிய முறையில் அன்றி, சில கோயில்களில் ஏழாம் நாள் தேர்த் திருவிழாவும், பத்தாம் நாளில் பிக்ஷாடனத் திருக்கோலமும், பதினோராம் நாள் நடராஜர் திருவீதி உலாவும் நடத்துவார்கள்.





அன்பர்களே! நீங்கள் இறைவனின் அம்சம் என்பதை உணர்ந்துகொள்ளுங்கள். அவன் நம்முள் உறைந்திருக்கிறன் என்பதை உணர்ந்தால் போதும், அகிலமெல்லாம் அவன் சொரூபமாகவே நமக்குத் தோற்றமளிக்கும்.

—குரு நானக்




# கடவுளை வேண்டுவது எப்படி?

மழைக்கால இருட்டு. மாறுவேடத்தில் அரசன் நகரசோதனை செய்கிருன். கொட்டுகிற மழையில் இருண்ட தெருக்களில் தன் அழகான குதிரை மீது மெதுவாகச் சவாரி செய்து வருகிருன்.

அரசன் கண்ணில் படாமல் சில கொள்ளைக்காரர்கள் பதுங்கிய படியே வருகின்றனர். அரசனின் குதிரையைத் திருடிச் செல்வதே அவர்கள் நோக்கம். திடீரென அவர்கள் அரசனைச் சூழ்ந்துகொண்டனர். அரசன் அமைதியுடன் இருந்தான். கொள்ளையர் அரசன் மீது தாவ இருந்தனர். திடீரென ஆறு வாலிபர்கள் அங்கு வந்தனர். கொள்ளையர்களைத் தாக்கினர். சற்று நேரத்தில் அரசனைத் தொடர்ந்து வந்துகொண்டிருந்த காவல்வீரர்களும் வந்தனர். கொள்ளையர் பிடிபட்டனர்.

அந்த வாலிபர்கள் அரசனை அடையாளம் கண்டுகொள்ளவில்லை. அரசன் அவர்கள் செய்த உதவியை மெச்சி அவர்களை அரண்மனைக்கு அழைத்துச் சென்ருன்.

மறுநாள் காலை அரசவை கூடியது. வாலிபர்கள் வந்தனர். அரசன் சிம்மாதனம் விட்டு இறங்கி வந்து அவர்களை அன்புடன் வரவேற்ருன். “உங்களுக்கு இஷ்டமானதைக் கேளுங்கள்; தரப்படும்” என்ருன். அதன்படி ஒவ்வொருவராகத் தமது கோரிக்கையை வெளியிட்டனர்.

முதல் வாலிபன் வீடு கேட்க, மற்றவர்கள் பதவி, செல்வம், கிராமத்திற்குப் பாதை, உயர்ந்த இடத்தில் திருமணம் ஆகியவற்றைக் கேட்டார்கள்.

ஆருவது வாலிபன் மட்டும், “அரசரே! வருடம் ஒரு முறை தாங்கள் எனது இல்லம் வந்து எனது விருந்தினராக இருந்து வர வேண்டும்” என்று கேட்டுக்கொண்டான்.

வாலிபர்கள் என்ன என்ன கேட்டார்களோ அவை யாவும் உடனே அரசனல் செய்து கொடுக்கப்பட்டன. கடைசியாக வரம் கேட்டவன் விஷயம் சற்றுச் சிக்கலானது. எனினும் அரசன் ஒப்புக் கொண்டுவிட்டதனுல் அதற்கான ஏற்பாடுகளை அரசாங்கம் செய்ய வேண்டியதாயிற்று.

அரசன் கிராமத்திலுள்ள அந்த ஆருவது இளைஞனின் வீட்டுக்குச் செல்ல நல்ல பாதை அமைக்கப்பட்டது.

அரசன் தங்குவதற்கு வசதியாக அந்தக் கிராமத்து - வீடு கோட்டை போல மாற்றியமைக்கப்பட்டது.



கோட்டை போன்ற வீட்டை நன்கு பராமரிக்கத் தேவையான மாத வருமானத்துக்கு வழி செய்யப்பட்டது.

மேலும், அரசன் விருந்தினனுகப் போவதால் அந்த வீட்டாரின் நிலை உயர்ந்திட இளைஞனுக்குத் தகுதியான பட்டமும் சூட்டப்பட்டது.

முடிவில் ஒரு பெரிய பிரச்னை—அரசன் விருந்தாளியாகத் தங்கும் போது அவனுக்குத் தகுந்த உணவளிக்க என்ன செய்வது என்ற யோசனை. முடிவில் அரசனின் பழக்க வழக்கங்கள் உணவுருசிகளை நன்கு அறிந்த அவனுடைய மகளையே அந்த இளைஞனுக்குத் திருமணம் செய்து கொடுத்தார்கள்.

இப்படியாக மற்ற ஐவர் தனித் தனியாகக் கேட்டுப் பெற்ற செல்வங்களை, ஆருவது இளைஞன் ஒருங்கே பெற்றுன். ஆருவது வாலிபனே ஆறறிவு பெற்ற மானிடனுக விளங்கினுன்.

இந்த இளைஞர்கள் அரசனிடம் வரம் கேட்டது போலத்தான் மக்களும் தங்கள் இஷ்டதேவதையிடம் வரம் கோருகிருர்கள். அப்படிக் கோருபவர்களில் எவன் கடவுளையே தன் இல்லம் வந்திருக்கும்படி வேண்டுகிருனே அவனே புத்திமான், பக்திமான். ஈச்வரனே ஈச்வரியோ நம்மிடத்தில் நித்திய வாசம் செய்ய வேண்டுமானுல் கூடவே எல்லாச் செல்வங்களும் தெய்விக குணங்களும் மனப்பான்மைகளும் வந்து தானே ஆக வேண்டும்?

கடவுளை வேண்டி நிற்போர் இந்த உண்மையைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

நன்றி—'விஜயம் பாரதம்'



## வள்ளலார் வாக்கு

* உடலால் செய்யும் பாவங்களுக்கு, மரம் முதலான சரீரம் உண்டாகும்.

* பாவம் என்பது ஆரம்பத்தில் சுகமாகவும் பின்பு துக்கமாகவும் இருக்கும்.

* மனதால் செய்யும் பாவங்களுக்குச் சண்டாள சாதி சரீரம் உண்டாகும்.

* இறைவனின் திருவருள் வேண்டுமாயின், வஞ்சகர் களுடன் இருக்கும் தொடர்பை அறுத்துக்கொள்ள வேண்டும்.

* இறை நம்பிக்கையில் அழுந்தி இருப்போரை உல கோர் பித்தன் என்று பழிப்பது இயல்பு. இதைப் பொருட் படுத்தக் கூடாது.

* வம்பு செய்யாதவரிடத்தில் இறைவன் எப்படி யெல்லாம் இருப்பான் தெரியுமா? அவர்கள் மனதில் கலந்திருப்பான்; அறிவில் கலந்திருப்பான்; அவர்களு டைய ஊனிலும் உயிரிலும் எலும்பிலும் கலந்திருப்பான். ஆன்மாவிலும் கலந்து இன்பம் பொழிவான்.

---



# உலோப குணமும் தர்ம குணமும்

மனிதனிடமுள்ள தீய குணங்களில் மிகவும் கொடிய தலையான தீய குணம் உலோபம். அதாவது ஒருவனிடத்தில் ஆயிரம் நல்ல குணங்கள் இருந்து, உலோப குணம் உடன் இருக்குமாயின், அத்தனை நற்குணங்களையும் கீழே அழுத்தி, உலோப குணம் ஒன்றுதான் மேல்நின்று அவனை உலகம் பழிக்கும்.

தாடகை என்ற கொடிய அரக்கி ஒருத்தி வளமையான மருதவனம் முழுவதையும் அழித்தாளாம். அது எதைக் காட்டுகிறது என்றால், உலோப குணம் ஒன்றே சகல நற்குணங்களையும் அழிப்பது.

வானளாவி ஓங்கி வளமையுடன் வளர்ந்துள்ள ஒரு மூங்கிற் காட்டில் நெருப்புத் தோன்றி, அந்த வளமை மிக்க மூங்கிற்காடு அழிந்து விடுவது போல, ஒருவனிடத்தில் தோன்றிய உலோப குணம் ஒன்றினாலே அடியுடன் அழிந்தவன் துரியோதன்.

ஓங்கி உலகளந்த உத்தமன் கண்ணபிரான் கையேந்தி ஐந்து வீடுகள் மட்டுமே கேட்டார். ஆற்றோரமாக வேகாத செங்கல்லை வைத்து, உளுத்துப் போன மூங்கிலை மேலே போட்டு, ஓடு வேய்ந்து ஐந்து வீடுகளை அமைத்துத் தந்திருந்தால், அவன் குலத்துடன் அழிந்திருக்க மாட்டான். பாதி ராஜ்யமே தரக் கடமைப்பட்ட அவன் ஐந்து வீடு தந்திருக்கலாமே? அந்த மூடன் உலோப குணத்தால், ''ஊசி குத்துகிற இடங்கூடத் தரமாட்டேன்'' என்றான். அதனால் அவன் அழிந்தான்.

எனவே நற்குணங்கள் எத்தனை எத்தனை இருப்பினும், ஒரே ஓர் உலோப குணம் இருப்பின், அத்தனை நற்குணங்களையும் அழுத்தி அவனையும் அடியுடன் அழித்துவிடும்.

நன்கு செந்தமிழில் தேர்ந்த புலவர் ஒருவர் பெரும் தனவந்தரிடம் போனார். வந்தவரை, 'வாரும்; இரும். உணவு அருந்தும்' என்று கூறாமல், ஒரு குவளை தண்ணீரும் தராமல், அந்த உலோபி அவரை அசட்டை செய்தான்.

ஒருவனிடத்தில் ஆயிரமாயிரம் தீய குணங்கள் இருந்து, அள்ளி வழங்கும் வள்ளன்மை என்ற நற்குணம் இருக்குமாயின், அத்தனை தீய குணங்களும் வெளிவராமல் தர்மகுணம் மேலோங்கி நிற்கும்; அவனுக்குப் புகழைத் தேடிக் கொடுக்கும்.

திருமுருக கிருபானந்தவாரியார்

அதனால் பொன்னையும் பொருளையும் நிலபுலன்களையும் தோட்டங்களையும் வறியார்க்கு வழங்கினார்கள் பலர். பாரி முந்நூறு கிராமங்களைக் கபிலர்க்குத் தந்தான். தன் பொன்தேரை முல்லைக்கு ஈந்தான் பாரி வள்ளல்.

தனக்கு அன்னியமான பொருளைக் கொடுக்க மனம் இசையும்; ஆனால் தான் அருமையாக வளர்த்த உடம்பைத் தர மனம் இடம் கொடுக்காது. தன்னிடம் அடைக்கலம் புகுந்த கேவலம் ஒரு புறு வுக்காக, சிபி என்ற வேந்தன் தன் உடலின் தசைகளை அறுத்து அறுத்துத் துலாவில் வைத்து, தானே அந்தத் துலா வில் ஏறினான்.

நினைக்கிறோம். அதே நேரத்தில் நாய் எனது என்கிறது; நரி எனது என்கிறது; யமன் எனது என்று நவில்கிறது. பேயும் நோயும் வேறு எனது என்று பேசுகின்றன. ஆதலால் இந்த உடம்பு யாருக்குச் சொந்தம்?

இதைத்தான் திருவள்ளுவர்,

'அன்பிலார் எல்லாம்
தமக்குரியர், அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு'

என்று கூறியருளினார். திருக்குறளில் ததீசி முனிவர் இமையவர்க்குத் தமது முதுகு எலும்பை வழங்கிய குறிப்பு

## அந்த நால்வர் யார்?



நாம் சில சமயங்களில் 'நாலுபேர் போன வழியில் போக வேண்டும்' என்று சொல்கிறோம். யார் அந்த நால்வர்? முற்காலத்தில் மிகச் சிறந்தவர்களாக வாழ்ந்து உலகத் தாருக்கு வழிகாட்டிய சைவசமயக் குரவர்களான திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்கவாசகர் ஆகி யோரே அந்த நால்வர்.

—கி. வா. ஜ. சொல்லக் கேட்டு
எழுதியவர்: **எஸ். வேங்கடேசன்**

உள்ளது. ததீசி முனிவர் தந்த முதுகு எலும்பை இந்திரன் வஜ்ராயுதமாகச் செய்து, அசுரரை வென்று, பெரிதும் உவந்து வந்து வாழ்ந்தான்.

இதனினும் மேலாக ஒருவர் செய்தார். அவரை நாம் எங்கே சிந்திக்கின்றோம்? ஆம். எத்தனை பெரிய தியாகம்! அன்புக்கு உறைவிடமான ததீசி முனிவர் அமரர்களுக்கு என்பும் தந்து புகழ் பெற் றார். ததீசி முனிவர் தம் உடலை ஒரு பொருளாக மதித்தாரில்லை. பாலும் தேனும் பழமும் பாயசமும் வேளை தவறாமல் உண்டு இந்த உடம்பை வளர்க் கிறோம். விதம் விதமான ஆடைகள், பளபளக்கும் அணிகலன்கள், உடலை எத்தனை அழகுகள் செய்து நிலைக்கண்ணாடி யில் கண்டு களிக்கின்றோம்! இத்தகைய உடம்பை நம்முடையதென்று நாம்

கொடைக்குணம் பல தீமைகளை மறைத்துவிடும் என்று முன்பு சிந்தித் தோம். உடம்பிலே உள்ள படை சொறி முதலிய குற்றங்குறைகளை ஒரு பட்டுச் சட்டை மறைத்துவிடுவது போல, தீமை எல்லாவற்றையும். தர்ம குணம் மறைத்துவிடும் என்பதற்குச் சான்றாக நின்றவன் கர்ண மகாராஜன்.

கர்ணன் நல்லவன் அல்லன். துரியோத னன் பாண்டவர்களுக்குப் பல கொடுமை

களைப் புரிந்திருக்கிறான். பீமனைக் கயிற்றில் கட்டிக் கங்கையில் எறிந்தான்; தூங்கும்போது அரவினங்களை ஏவிக் கடிக்க விட்டான்; உண்ணும் உணவில் நஞ்சு கலந்து கொடுத்தான்; ஆற்றில் கழு நிறைத்துக் குதிக்குமாறு செய்தான்; குடியிருக்கும் வீட்டில் கொள்ளி வைத்தான்; சூது ஆடினான்; மாதுநல்லாளை மான பங்கம் புரிந்தான். இத்தனை கொடுமை புரிந்த துரியோதனனை ஒரு முறையாவது கர்ணன் தடுத்து அறிவுரை பகர்ந்தானில்லை. கொடுமைகள் அனைத்துக்கும் உடனிருந்து உதவினான்.

அரசவையில் அபலையாக நின்று அழுத யாக பத்தினியைப் பார்த்து, "திரௌபதியே! உன் கணவர்கள் அடிமைகளாகிவிட்டார்கள். ஆதலால் இங்குள்ள மன்னர்களில் ஒருவனை நீ உன் கணவனாக வரித்துக்கொள்" என்று வாய் கூசாமல் கூறினான்.

இங்ஙனம் பலப் பல தீய குணங்களைப் புரிந்த கர்ணனை உலகமே புகழ்கிறது. இதற்கு என்ன காரணம்? அவன் வரையாதுமின்றி வழங்கினான். பொன்னும் பொருளும் ஈந்து அவனது இரு கரங்களும் சிவந்தன. மேலும், தன் உயிருக்கு ஆதாரமாக இருந்த கவச குண்டலங்களை ஈந்தான். ஆதலால், கொடைக் குணம் படைத்த கர்ணனுடைய தீமைகளையெல்லாம் தர்மகுணம் மறைத்துவிட்டது.

ஆதலால், பல நற்குணங்களை மறைப்பது உலோபம். பல தீய குணங்களை மறைப்பது ஈகை.

எனவே, மக்கள் உலோபத்தை விடுத்து, ஈகையை மேற்கொண்டு, பெரும் புகழும் புண்ணியமும் பெற்று இகபர நலன்களைப் பெறுவார்களாக!

## சந்தாதாரர்கள் கவனிக்க

* சந்தா எண் 1,00,005 முதல் 1,00,436 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை செப்டம்பர் மாதத்துடன் முடிவடைகிறது. பத்திரிகையைத் தொடர்ந்து அனுப்ப, அடுத்த ஆண்டுச் சந்தாத் தொகை ரூ. 15ஐ செப்டம்பர் 25-ஆம் தேதிக்குள் அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்ளுகிறோம்.

* சந்தா எண் 1,10,001 முதல் 1,10,745 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை அக்டோபர் மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 1,20,001 முதல் 1,20,385 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை நவம்பர் மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 1,30,001 முதல் 1,31,169 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை டிசம்பர் மாதத்துடன் முடிவடைகிறது.

சந்தாவைக் கூடிய விரைவில் முன்னதாகவே செலுத்துவதனால் பல சங்கடங்களையும் குழப்பங்களையும் தவிர்க்க முடிகிறது.

ஆயுள் சந்தாதாரராகத் தங்களைப் பதிவு செய்துகொள்ள விரும்பும் ஆண்டுச் சந்தாதாரர்கள், தாங்கள் செலுத்தியுள்ள ரூ.15 போக மீதி ரூ.165-யைச் செலுத்தி ஆயுள் சந்தாதாரராகத் தங்களைப் பதிவு செய்துகொள்ளலாம். தொகையை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ 15 மாதங்களுக்குள் செலுத்தலாம். ஆயுள் சந்தாதாரராகச் சேருவது பத்திரிகையின் வளர்ச்சிக்கு நீங்கள் பெரிதும் உதவி செய்வதாக அமையும்.

நிர்வாகி,

ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்






1. ஸ்ரீமத் பாகவதம்

பக்கம் 361—ரூ. 40

ஆசிரியர்: அ. லெ. நடராஜன்

2. ராமன், கிருஷ்ணன், சிவன்

டாக்டர் ராம் மனோகர் லோகியா ஆங்கிலத்தில் எழுதிய ஒரு திறனாய்வு நூல். பக்கம் 37—ரூ. 3

தமிழில்: ஆர். எம். கண்ணபிரான்

3. தமிழ்ப் பண்பாட்டில் வைணவம்

சமய ஆராய்ச்சியாகவும் இலக்கிய ஆராய்ச்சியாகவும் எழுதப்பட்டிருக்கும் நூல். பக்கம் 194—ரூ. 10

ஆசிரியர்: பேராசிரியர் கு. அருணாசல கவுண்டர்

மேலே குறிப்பிட்ட மூன்று நூல்களையும் வெளியிட்டோர்: சமுதாயம் பிரசுராலயம், 16, நரேந்திரதேவா வீதி, என். ஜி. ஆர். நகர், கோவை-15.

4. ஸ்ரீமத் பாகவத புராணம்

பக்கம் 183—ரூ. 11-50

ஆசிரியர்: வித்வான் எம். நாராயணவேலுப் பிள்ளை

குமரன் பதிப்பகம், 2, முத்துகிருஷ்ணன் தெரு, தி. நகர், சென்னை-600 017.

5. பாரதி போற்றிய பன்னரும் உபநிடத நூல்

ஒன்பது உபநிடதங்களில் ஒளிரும் அருமணிகளை இந்த நூலிலுள்ள 27 கட்டுரைகளில் ஆசிரியர் இனம் காட்ட முயற்சித்துள்ளார். பக்கம் 144—ரூ. 7

ஆசிரியர்: தி. சா. ராஜு

6. குரு சிஷ்ய பரம்பரை

இந்துசமயச் சார்புடைய பல வரலாறுகளையும் கட்டுரைகளையும் கவிதைகளையும் 41 தலைப்புகளின் கீழ் 39 ஆசிரியர்கள் எழுதியுள்ளனர். பக்கம் 196—ரூ. 5

தொகுப்பாசிரியர்: சுவாமிநாத ஆத்ரேயன்

மேலே கூறிய இரண்டு நூல்களையும் வெளியிட்டோர்: வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை-17.

7. ஆபஸ்தம்ப ஸூத்ர தர்ப்பண விளக்கம்

பக்கம் 48—ரூ. 3

ஆசிரியர்: ஸ்ரீவத்ஸ சோமதேவ சர்மா

பவானி புக் சென்டர், 19, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை-33.

8. தெய்வத் திருமணங்கள்

பார்வதி, வள்ளி, ருக்மிணி, சீதை, ஆண்டாள், விநாயகர், திருமலையான், மீனாட்சி திருமணங்களை இந்த நூல் சித்திரிக்கிறது. பக்கம் 332—ரூ. 15

ஆசிரியர்: திருமருகல் சிங்காரவேலனார்

அருணோதயம், 3, கௌடிய மடம் சாலை, இராயப்பேட்டை, சென்னை-14.

**9. கம்பன் கண்ட ராமனும் சீதையும்**

பக்கம் 62—ரூ. 3-50

**ஆசிரியர்: மு. சதாசிவம்**

மீரா நிலையம், 35, பாபாத்தி காடு முதல் தெரு, ஈரோடு-4.

**10. விவேக சூடாமணி**

ஆதிசங்கரர் இயற்றிய நூலின் தமிழாக்கம். பக்கம் 120—ரூ. 15

அ. செல்லத்துரை, சிவதொண்டன் நிலையம். செங்கலடி, (கி. மா.) இலங்கை.

**11. காயாமொழி அருள்மிகு முப்புராதி அம்மன் அருள் தரிசனம்**

தல புராணம், அம்மன் கும்மி மற்றும் பாமாலை அடங்கிய நூல். பக்கம் 111-ரூ. 2

பகலவன் பதிப்பகம், 69, 4-ஆவது மெயின் ரோடு, காந்திநகர், சென்னை-600020.

**12. ருத்திராக்ஷத்தின் தோற்றமும் மகிமையும்**

பக்கம் 32—விலை குறிப்பிடப்பட வில்லை.

**13. இரண்டு எழுத்து மகிமை ஸ்ரீராமநாமம்**

பக்கம் 56—விலை குறிப்பிடப்பட வில்லை.

மேலே குறிப்பிட்ட இரண்டு நூல்களையும் தொகுத்தவர் : சுவாமி மீனாட்சிராமன்.

மேற்கூறிய இரண்டு நூல்களையும் வெளியிட்டோர்: போதேந்திர சுவாமிகள் அதிஷ்டானம், கோவிந்தபுரம்-612101, (வழி) ஆடுதுறை, தஞ்சை மாவட்டம்.

**14. மயிலைக் கற்பகம்**

மயிலாப்பூர் கபாலீச்வரர் கோவில் பற்றிய நூல். பக்கம் 96—ரூ. 6

**ஆசிரியர் : நஜன்**

பிரதிபா பிரசுரம், 39, ஆடம் தெரு, மயிலாப்பூர், சென்னை-600004.

**15. இராமகிருஷ்ணரும் இராமலிங்கரும்**

பக்கம் 92—ரூ. 5

**16. நந்தனாரும் திருப்பாணாழ்வாரும்**

பக்கம் 80—ரூ. 3-75

**17. பாரதியும் தாகூரும்**

பக்கம் 99—ரூ. 5

**18. ஆண்டாளும் மீராவும்**

பக்கம் 68—ரூ. 3-25

**19. மாணிக்கவாசகரும் நம்மாழ்வாரும்**

பக்கம் 94—ரூ. 5

**20. கபீர்தாசரும் தாயுமானாரும்**

பக்கம் 80—ரூ. 3-75

**21. இராமனும் முருகனும்**

பக்கம் 80—ரூ. 4-50

மேலே குறிப்பிட்ட ஏழு ஒப்புநோக்கு நூல்களையும் எழுதியவர் : பி.ஸ்ரீ.

மேற்கூறிய ஏழு நூல்களையும் வெளியிட்டோர்: ஸ்டார் பிரசுரம், 72, பெரிய தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-600005.

**22. ஸ்தோத்திர மஞ்சரி**

பக்கம் 212—ரூ. 6 90

விநாயகர், சுப்பிரமணியர், சிவன், பராசக்தி, விஷ்ணு, நவக்கிரகம், ஐயப்பன், அனுமான் ஆகிய தெய்வங்களின் மீது மகான்கள் செய்த பஞ்சரத்னங்கள், அஷ்டகங்கள், அஷ்டோத்தர சதநாமங்கள் மற்றும் தமிழ்த் துதிப் பாடல்களின் தொகுப்பு இந்நூல். சம்ஸ்கிருத ஸ்தோத்திரங்கள் தமிழ் எழுத்தில் அச்சிடப்பட்டுள்ளன.

**23. வழிபாட்டுத் துணைவன்**

பக்கம் 96—ரூ.3. விநாயகர், முருகன், சிவன், பராசக்தி, திருமால் ஆகிய தெய்வங்களின் மீது பெரியோர்கள் பாடிய தமிழ்த் துதிப்பாடல்கள் இதில் உள்ளன.

மேற்குறிப்பிட்ட இரண்டு நூல்களையும் வெளியிட்டோர்: அன்னை பதிப்பகம், 38, இரயில் நகர், கீழ் அம்பிகாபுரம், திருச்சி-620004.

**24. செல்வ மாலிகா**

ஸ்தோத்திரங்கள், பாசுரங்கள் ஆகியவற்றின் தொகுப்பு. பக்கம் 64—ரூ. 3

**தொகுத்தவர் : A.R. சுப்ரமணியம்**

அநுராகம், 54, பாண்டி பஜார், சென்னை-600 017.

உண்மை நிகழ்ச்சி

# பரோபகாரம்

நாடோடி

**பரோபகாரம் ஒரு தெய்விக குணம். சத்துவ குணத்திலிருந்து தோன்றும் அது நம்மைத் தெய்வத்தை நோக்கிச் செலுத்துகிறது.**

சைதன்ய மகாப் பிரபுவின் பக்தர்களில் ஒருவர் சிசிர்குமார் கோஷ். அவர் சிறு பையனாக இருந்தபோது ஒரு நாள் இருட்டப்போகும் சமயம் தம் தமையனுடன் பஷோஹர் என்ற தம் கிராமம் நோக்கிச் சென்றுகொண்டிருந்தார்.

சிறுவன் சிசிர் முன்னால் சென்றுகொண்டிருந்தான். பின்னால் தமையன் வந்துகொண்டிருந்தான். வழியில் நரி ஊளையிடும் சப்தமும், மனிதர் யாரோ வலி பொறுக்க முடியாமல் கத்திக்கொண்டிருந்த சப்தமும் கேட்க, சிறுவன் சிசிர் ஓடிப்போய் என்னவென்று பார்த்தான். யாரோ ஒருவர் திடீரென்று வியாதி வந்து வழியில் படுத்துக் கிடந்தார். அவர் இறந்ததும் அவரைத் தின்பதற்காகப் பக்கத்தில் நரியொன்று காத்துக் கிடந்தது. அவர் ஆடையெல்லாம் மலமும் மூத்திரமும் ஆகி, அவரிடமிருந்து ஒரே துர்நாற்றம் வீசிற்று. சிசிரைக் கண்டதும் நரி அப்பால் ஓடியது.

இளகிய மனம் படைத்த சிசிர் அந்த ஆள் இருந்த நிலையைப் பொருட்படுத்தவில்லை. அவர் பக்கத்தில் சென்று அவருக்கு என்ன வேண்டும் என்று கேட்டான். அவர் தமக்குத் தண்ணீர் வேண்டுமென்று சொன்னார். பக்கத்தில் இருந்த குளத்திலிருந்து அவருக்குத் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தான் சிசிர்.



அவர் தாம் ஒரு காரியமாகச் சென்றுகொண்டிருந்ததாகவும், வழியில் தமக்கு அம்மை கண்டுவிட்டதாகவும், இனித் தம்மால் ஓர் அடிகூட எடுத்து வைக்க முடியாதென்றும் சொன்னார்.

அவரைத் தன் தோளில் தூக்கிக் கொண்டு செல்வதென்று சிசிர் தீர்மானித்தான். ஆனால் அவனுடைய அண்ணனுக்கு இது பிடிக்கவில்லை. ஆனால் சிசிர் இதைப் பொருட்படுத்தவில்லை. அவரை மிகவும் கஷ்டப்பட்டுத் தூக்கிக்கொண்டு தன் கிராமம் சென்றான். வழியெல்லாம் அந்த ஆளுக்கு வயிற்றுப்போக்குப் போய்க்கொண்டே இருந்தது. சிசிர் தன்மீதெல்லாம் அசிங்கமானதைக் கொஞ்சங்கூடப் பொருட்படுத்தவில்லை.

கடைசியில் சிசிர் அவரை வீட்டிற்கு அழைத்துக் கொண்டு சென்றான். அவருக்கு வைத்தியம் செய்யப்பட்டது. அவரது உடம்பு குணமாயிற்று.

இதனால், பரோபகார உள்ளம் படைத்த சிசிர், சைதன்ய மகாப்பிரபுவின் பக்தராக மாறியதில் ஆச்சரியமில்லை.



சூதாட்டத்தில் மும்முரமாக ஈடுபடுபவர்கள் பண்புடன் பணத்தையும் இழந்தே ஆகவேண்டும்.

—செஸ்டர்பீல்டு



மதபோதனையற்ற கல்வி அறிவுள்ள அரக்கர்களை உருவாக்குகிறது. —வெலிங்டன் பிரபு



குழந்தைகளுக்கு நல்லொழுக்கத்தைப் போதிப்பதற்குத் தகப்பனைவிடத் தாயே பெரிதும் தகுதியுள்ளவள். —வசிஷ்ட சூத்திரம்



எவ்விதத்திலும் கொலை செய்யாதவர்கள், அனைத்தையும் சகித்துக் கொள்பவர்கள், அனைவருக்கும் அடைக்கலம் கொடுப்பவர்கள் ஆகியோர் சொர்க்கம் போவார்கள். —இதோபதேசம்



## சகோதரி நிவேதிதை

சகோதரி நிவேதிதை அம்மையார் பெண்கல்விக்காக ஒரு கல்வி நிலையமும், அநாதை விடுதியும் நடத்தி வந்தார். அதற்காக நிதியுதவி கோரி ஒரு பணக்காரன் வீட்டுக்குப் போனார்.

அந்தப் பணக்காரன் திடீரெனச் சீற்றம் கொண்டு அந்த மகா உத்தமியை ஓர் அறை அறைந்துவிட்டான்.

அமைதியாக அம்மையார், “எனக்குக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்து விட்டீர்கள். ஏழைக் குழந்தைகளுக்காக ஏதாவது கொடுங்கள்” என்று மன்றாடினார்!

அது அந்தத் திமிர் பிடித்தவனின் நெஞ்சைத் தொட்டது. நிவேதிதையின் காலில் விழுந்து அவன் மன்னிப்புக் கோரினான். நிதியும் அளித்தான். —இராம. கோபாலன்



# ஆன்மிக வினா-விடை

**சுவாமி கமலாத்மானந்தர்**



டி. வி. பாலகிருஷ்ணன், தக்கலை

**கேள்வி :** கோயில்களில் இருக்கும் தெய்வ விக்கிரகங்களைத் திருடிக் கொண்டுபோய் விற்கிறார்கள். அந்தத் தெய்வங்கள் ஏன் இவர்களை உடனடியாகத் தண்டிக்கக் கூடாது?

**பதில் :** சிலையே தெய்வமன்று. அதில் தெய்வத்தைக் காண்பவனுக்கு அது தெய்வமாக இருக்கும். நம்பிக்கை இல்லாதவனுக்கு அது கல்லாகவும் செம்பாகவும்தான் இருக்கும். அதுவே ஒன்றும் செய்யாது.

'தெய்வம் நின்று கொல்லும்' என்பது ஆன்றோரின் அனுபவ வாக்கு.

திருடுபவன் உடனடியாகத் தண்டனை கிடைப்பதிலிருந்து தாற்காலிகமாகத் தப்பித்துக்கொள்ளலாம். ஆனால், அவனது வினை அவனைத் தொடரவே செய்யும்; உரிய காலத்தில் அவன் அதன் பலனை அனுபவிக்கத்தான் வேண்டும் என்பது திட்டவட்டமான ஓர் உண்மையாகும். இந்த நியதி எல்லா விதமான நல்வினை, தீவினை, இரண்டும் கலந்த வினைகளுக்கும் பொருந்தும்.

கடவுள், மனிதன் செய்யும் தவறுகளுக்கு அப்போதைக்கப்போதே தண்டனை கொடுப்பது என்று ஆரம்பித்தாரானால், உலகில் ஒரு மனிதனும் இருக்க மாட்டான்.

மேஜர்தாசன், ஈரோடு-10

**கேள்வி :** மனிதன் மறுஜன்மம் எடுக்கிறான் என்பது உண்மையா?

**பதில் :** ஆசைகள் உள்ள வரையில் மனிதனுக்கு நிச்சயம் பிறவிகள் உண்டு. லௌகிக மனிதன் தனது சொல், செயல், சிந்தனைகளுக்கு ஏற்ப நல்லதாகவோ கெட்டதாகவோ மறுபிறவியை எடுக்க நேரிடுகிறது.

உபநிஷதங்கள், கீதை, மற்றும் இந்துமதப் பிரமாண நூல்களின்படி மறுபிறவி உண்டு என்பது உண்மையே. இந்தக் கருத்து பௌத்தம்-சமணம் ஆகிய மதங்களுக்கும் உடன்பாடானது.

பக்தி செய்வதன் மூலம் முக்தி பெறுவோருக்கும் ஜீவன்முக்தர்களுக்கும் மறுபிறவி இல்லை. ஏனையோருக்குப் பிறவிச் சுழல் உண்டு.

ஒரு பக்தை, கன்னியாகுமரி

**கேள்வி :** பெண்கள் பேறு காலத்தின்போது கோயிலுக்குச் செல்வதில் தவறு ஏதேனும் உண்டா?

பதில்: பெண்கள் கருவுற்ற காலத்தில் கோவிலுக்குப் போவதில் தவறு ஏதுமில்லை. தெய்வத்தை வழிபடுவது எப்போதும் எந்த நிலையிலும் நல்லதே ஆகும்.

**A. S. ராமசந்திர ஐயர், சென்னை-89**

**கேள்வி:** ஆன்மிகச் சொற்பொழிவுகளிலும் தர்மநூல்களிலும் 'சத்சங்கம்' நமக்கு இன்றியமையாதது என்று சொல்லப்படுகிறது. ஆனால், இக்காலத்தில் மகான்களைத் தேடுவது சிரம சாத்தியமாக இருப்பதோடு நமது வாழ்க்கையும் அதற்கு இடம் தரவில்லை. இந்த நிலையில் சத்சங்கத்துக்கு நாம் என்னதான் செய்வது?

பதில்: சத்சங்கத்துக்கு மகான்களின் தொடர்பைப் பெறுவதுதான் தலையாயது. இதில் கருத்து வேற்றுமை இருப்பதற்கே இடமில்லை. ஆனால், மகான்கள் கிடைக்காத நிலையில், வேறு ஒன்றும் செய்யாமல், மகான்களைத் தேடுவதையே செய்து கொண்டிருக்க வேண்டும் என்ற அவசியமில்லை.

நம்மைவிடச் சிறந்தவர்களுடன் கூடிப் பழகி வந்தால் படிப்படியாக உயரலாம். நாளடைவில் ஒரு மகானுடைய சந்திப்பும் கிடைக்கும்.

மகான்கள் எழுதிய நல்ல ஆன்மிக நூல்களின் மூலமும் சத்சங்கப் பயிற்சி ஏற்படும்.

சத்சங்கம் எல்லாவற்றிலும் முதலாவது தரத்தைச் சேர்ந்த ஒப்புயர்வற்ற மேலான ஒரு சத்சங்கம் உண்டு. அதுதான் ஆண்டவனின் திருநாமத்தை எப்போதும் ஜபித்துக்கொண்டிருப்பது.

உபநிஷதக் கருத்துக்களைப் படிப்பதும் சிந்திப்பதும் உபநிஷத ரிஷிகளுடன் கொள்ளும் சத்சங்கமாகும். இதே உண்மை கீதை முதலிய சாஸ்திரங்களுக்கும் பொருந்தும்.

ஆழ்வார்கள், நாயன்மார்கள், ஸ்ரீராமகிருஷ்ணர், வடலூர் வள்ளலார் போன்ற வரிசையில் அமைந்த பெரியோர்களின் அருள்மொழிகளைப் படிப்பதும் சிந்திப்பதும் அவரவர்களுடன் கொள்ளும் சத்சங்கமாக அமையும்.

புனித ஸ்தலங்களாகக் கருதப்படும் ஊர்களிலுள்ள ஆலயங்களுக்குச் செல்வதும், தீர்த்தமாடலும்கூடச் சத்சங்கத்திற்கு உட்பட்டதே.

ஆன்மிக லட்சியத்தின் அடிப்படையில் வெளியிடப்படும் 'ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்' போன்ற பத்திரிகைகளிலும் சத்சங்கத்தின் பல அம்சங்கள் இருக்கின்றன.

''கடவுளைப் பற்றிய ஆழ்ந்த ஆன்மிக உண்மைகளைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற தீவிர புத்தி உனக்கு இருக்குமானால், அந்த இறைவனே, சத்குரு ஒருவரை உன்னிடம் அனுப்புவார். பக்தனே, குருவைத் தேட வேண்டிய விஷயத்தில் உனக்குக் கவலையே வேண்டாம்'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் குறிப்பிட்டுள்ளார். ஸ்ரீராமகிருஷ்ணர் குருவைப்பற்றிக் குறிப்பிட்டுள்ள இந்தக் கருத்து, சத்சங்கத்தின்பொருட்டு நாம் மகான்களைத் தேடுவதற்கும் பொருந்தும்.

ஸ்ரீராமகிருஷ்ணரிடம் தீவிர அருள்தாகம் இருந்தது. அவர் எங்கும் போகாத நிலையிலும், அவர் இருந்த இடத்துக்கே மகான்களின் மூலம் சத்சங்கம் அவரை வந்தடைந்தது.

**ருக்மிணி அம்மாள், சேத்துப்பட்டு**

**கேள்வி: பரமேஷ்டி குரு என்பவர் யார்?**

பதில்: நமக்கு உபதேசம் செய்தவர் குரு. அந்தக் குருவுக்கு உபதேசம் செய்தவர் பரமகுரு. பரம குருவுக்கு உபதேசம் செய்தவர் பரமேஷ்டி குரு. உதாரணம்—சுவாமி விரஜானந்தரின் குரு விவேகானந்தர். விரஜானந்தருக்கு ஸ்ரீராமகிருஷ்ணர் பரம குருவும், தோதாபுரி பரமேஷ்டி குருவும் ஆவர்.




பாண்டவர்களின் சார்பாகத் துரியோதனனிடம் கிருஷ்ணன் தூது வந்து, சபையில் துரியோதனனுக்கு அறிவுறுத்திய சமயத்தில் துரியோதனன் அலட்சியமாக இருந்தான். அப்போது அவையில் இருந்த பரசுராமர் கீழ்வரும் கதையைத் துரியோதனனுக்குச் சொன்னார்—

அரசே! நான் கூறுவதைக் கவனமாய்க் கேள். நல்லதென்று தோன்றுமாயின் அதை வாழ்க்கையில் கடைப்பிடி.

கொண்டான். பெரியோர்கள் சொன்னதை அவன் மதிக்கவில்லை. அப்போது அவர்கள், ''அரசே! உனக்கு நிகர் யாரும் இல்லை என்று நீ சொல்லிக் கொண்டிருக்கிறாய். நரர் நாராயணர் என்று இருவர் இருக்கிறார்கள். அவர்களுக்கு நீ நிகராகமாட்டாய்'' என்று தெரிவித்தார்கள்.

உடனே அரசன் அவர்களிடம், ''நீங்கள் சொல்லும் நர நாராயணர் எங்கே இருக்கிறார்கள்? அவர்கள் பிறந்த ஊர் எது? அவர்களின் தொழில் என்ன?'' என்று கேட்டான்.

''நரன், நாராயணன் என்ற இரண்டு தவசிகள் மானுட உலகுக்கு வந்திருப்பதாகக் கேள்வி. அவர்களுடன் போர் தொடுத்துப் பார். கந்தமாதன பர்வதத்தில் அவர்கள் கடும் தவம் செய்வதாகக் கூறுகிறார்கள்'' என்று சொன்னார்கள்.

# பரசுராமர் சொன்ன கதை

-நம்பி-

முற்காலத்தில் சர்வ வல்லமையும் பெற்ற அரசன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் தம்போத்பவன். உலகம் முழுமையும் அவன் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. ஆற்றலும் திறமையும் படைத்த அவன் ஒவ்வொரு நாளும் அதிகாலையில் எழுந்ததும் பிராம்மணர்களையும் க்ஷத்திரியர்களையும் வைசியர்களையும் நோக்கி, ''எனக்கு மேலாகவோ சமமாகவோ ஆயுதத்தில் வல்லவன் அந்தணர்களிலோ அரச குலத்தவர்களிலோ வணிகர்களிலோ எவனாவது இருக்கிறானா?'' என்று கேட்பான்.

வாய்மதம் கொண்டு கொழுப்புடன் அரசன் இப்படிப் பேசுவது தகாது என்று சான்றோர்கள் சொல்லிப் பார்த்தார்கள். அரசன் அகந்தையுடன் நடந்து

பெரியோர்கள் இவ்வாறு தெரிவித்ததும் பொறுமையற்ற அந்த அரசன் பெரும் படையை அழைத்துக்கொண்டு அவர்களுடன் போர் செய்யப் புறப்பட்டான். காட்டை அடைந்து கடும் தவம் செய்யும் அவர்கள் இருவரையும் சந்தித்தான். துரும்பு போல் இளைத்திருந்த அவர்களை அணுகி, நலம் விசாரித்து வணங்கினான்.

அவர்கள் உணவும் பானமும் கொடுத்து அந்த அரசனை விசாரித்து விட்டு, ''என்ன காரியம் செய்ய வேண்டும்?'' என்று கேட்டார்கள்.

அதற்கு அவன், ''நான் பகைவர்களை எனது புஜபலத்தால் வென்று உலகை வசப்படுத்திக்கொண்டுள்ளேன். உங்க



ளுடன் போர் செய்ய விரும்பி வந்துள்ளேன்'' என்று சொன்னான்.

அவர்கள் இருவரும், ''அரசே! இந்த ஆசிரமத்தில் கோபத்துக்கும் லோபத்துக்கும் இடம் இல்லை. போரும் தவிர்க்கப்பட்டிருக்கிறது. போர் இல்லாதபோது ஆயுதங்களின் தேவையும் இல்லை. ஒழுங்கின்மையும் இராது. உனக்குப் போர் செய்வதில் விருப்பம் இருக்குமானால், அரசகுலத்தவர் பலர் இருக்கிறார்கள். அவர்களிடம் சென்று போர்புரி'' என்றார்கள்.

அவர்கள் இவ்வாறு சொல்லியும் அரசன் தம்போத்பவன் கேட்கவில்லை. போரில் மிகுந்த நாட்டமுள்ளவனாக, மீண்டும் மீண்டும் அவர்களைப் போருக்கு அழைத்தான். அவர்கள் பொறுமையோடு இருந்ததையும், நயமொழிகள் கூறியதையும் அவன் பொருட்படுத்தவில்லை.

கொழுப்புக் காரணமாக, ''போர் செய்ய வாருங்கள்; போர் செய்ய வாருங்கள்'' என்று மீண்டும் மீண்டும் தம்போத்பவன் ஊக்கத்தோடு அழைத்தான்.

உடனே நரர் என்பவர் ஒரு பிடி ஈர்க்குகளைக் கையில் எடுத்துக்கொண்டு, ''அரசே! உன் கொழுப்புக் காரணமாக அனைவரையும் நீ போருக்கு அழைக்கிறாய். ஆகவே அஸ்திரங்களையும் சஸ்திரங்களையும் எடுத்துக்கொள். படையைத் திரட்டிக்கொள். போரில் உனக்கு உள்ள ஊக்கத்தைக் குறைக்க முயல்கிறேன்'' என்று சொன்னார்.

இதைக் கேட்ட தம்போத்பவன், ''தவசியே! இந்த அஸ்திரத்தைக் கொண்டு போர்செய்ய முன்வரும் உம்முடன் போர் செய்ய விருப்பமே'' என்று கூறி, சேனையுடன் சேர்ந்துகொண்டு அம்புமாரிகளைப் பொழியத் தொடங்கினான். தம்போத்பவன் விட்ட அம்புகளை எல்லாம் அந்த முனிவர் தம் கையில் வைத்திருந்த ஈர்க்குகளாலேயே தடுத்தார். அவற்றைக் கொண்டு பகைவர்களின் காதுகளையும் மூக்குகளையும் துன்பமுறச் செய்தார்.

தாக்குப் பிடிக்க முடியாத தம்போத்பவன் நரர் என்ற அந்தத் தவசியைச் சரணடைந்தான்.

சரணடைந்த அந்த அரசனுக்கு, நரர் தேவையான புத்திமதிகளைக் கூறினார்—''அரசே! க்ஷத்திரிய தருமத்திலும் பகைவர்களின் பட்டணங்களையும் வெல்வதில் நாட்டமுள்ளவன் உன்னைப் போல் இருப்பது கூடாது. தாழ்ந்தவர்களாயினும், சிறந்தவர்களாயினும், யாரையும் நிந்திக்காதே. அகந்தையின்றி, குடிமக்களை அன்போடும் அறிவோடும் பரிபாலனம் செய். பலாபலனை அறிந்து கொள்ளாமல் யாரையும் அவமதிக்காதே. இனிக் கொழுப்புடன் நடந்து கொண்டு பிறரை அவமதிக்காதே. நலத்துடன் போய் வா'' என்று அனுமதி கொடுத்தார்.

தம்போத்பவன் அவர்களிடம் வணங்கி விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டுச் சென்றான்.

''ஆகையால் துரியோதனா! கொழுப்புடன் போரில் நாட்டம் கொள்ளாதே. அகந்தையை விட்டுவிடு'' என்று பரசுராமர் புத்திமதி சொன்னார்.

[உத்தியோக பருவம்]

---

## செய்திகள்

□ பாண்டிச்சேரியில் ஜூலை 31ஆம் நாள் வர்த்தக சபைக் கட்டிடத்தில், ஸ்ரீராமகிருஷ்ண சேவா சங்கம் துவக்கப் பெற்றது. சுவாமி கமலாத்மானந்தர் சேவா சங்கத்தைத் துவக்கி வைத்து, சுவாமி விவேகானந்தரின் மக்கள் தொண்டு பற்றிய கருத்தை விளக்கிப் பேசினார்.

□ சமீபத்தில் இலங்கையில் நேர்ந்த இனக் கலவரங்களினால் தமிழர்கள் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளனர். இதற்கு முன்பும் இலங்கையில் கலவரங்கள் நடந்ததுண்டு. ஆனால் முன்பு எப்போதையும்விட இந்த முறை நடைபெற்ற கலவரம் மிகமிகப் பயங்கரமானது.

பாதிக்கப்பட்ட தமிழ்ப் பெருமக்களுக்கு ஸ்ரீராமகிருஷ்ண மடம் தனது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறது.

இலங்கையைச் சேர்ந்த மட்டக்களப்பில் தமிழ் மாணவர்களுக்காக ராமகிருஷ்ண மிஷன் மாணவர் விடுதியை நடத்தி வருகிறது.

கொழும்பு, ராமகிருஷ்ண ஆச்ரமம் தனது பணிகளில் ஒன்றாக 'International Guest House' என்ற பெயரில் சர்வதேசக் கலாசார நிலையம் ஒன்றைப் பெரிய அளவில் நடத்தி வருகிறது.

கொழும்பு, ஸ்ரீராமகிருஷ்ண மிஷனைச் சேர்ந்த நிறுவனங்கள் கலவரத்தின் போது தாக்கப்பட்டு நாசமடைந்தன. இதன் மூலம் இழப்பு ரூ. 6 லட்சம் என்று கணக்கிடப்பட்டுள்ளது.

இந்துக் கலாசாரத்திலும் சைவ சித்தாந்தத்திலும் இலங்கை வாழ் தமிழர்கள் பெரிதும் பற்றுக் கொண்டவர்கள். அங்கு மீண்டும் அமைதி நிலவவும் சகோதரத்துவம் ஓங்கவும் இறைவனைப் பிரார்த்திக்கிறோம். ●●

# அன்புக்கு ஓர் இதயம்

## ஏ. சுப்பிரமணியம்

அன்னை ஸ்ரீசாரதாதேவியைச் சந்திக்க நீண்ட தொலைவிலிருந்து ஒரு பக்த தம்பதிகள் தங்கள் குழந்தைகளுடன் ஜயராம்பாடிக்கு வந்தனர்.

அன்னையிடம் தீட்சை பெற்றதும் அவர்கள் தங்கள் ஊருக்குத் திரும்ப நினைத்தனர்.



சாப்பிட்டு முடிந்ததும் அவர்கள் அன்னையின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார்கள். பிறகு அங்கிருந்து புறப்பட்டனர்.

அன்னை சாரதாதேவியார் கண்களில் நீர் நிறைந்தவராய் அவர்களைப் பிரிய முடியாமல், வீட்டிலிருந்து கிராமத்தின் கோடி வரை நெடுந்தொலைவு அவர்களோடு நடந்து வந்தார். அவர்களும் கண்களில் நீர் வழிந்தபடியே தங்களை வழியனுப்ப வரும் அன்னையுடன் நடந்தார்கள். அன்னை ஜயராம்பாடி கிராமத்தின் எல்லையில் நின்றார். அவர்கள் அன்னையிடம் விடைபெற்றுப் பிரிந்தனர்.

அன்னை அங்கு நின்றபடியே அவர்கள் போகும் காட்சியைப் பார்த்துக் கொண்டே இருந்தார். அவருடைய மகளும் மகனும் பேரக் குழந்தைகளும் அன்னையின் உருவம் தங்கள் கண்களில் தெரியும் வரை திரும்பத் திரும்பப் பார்த்தபடியும் கைகளை அசைத்தபடியுமாகச் சென்றார்கள்.



அன்னை சாரதாதேவியார்

அன்னையும் கண்களில் நீர் நிறைய அவர்களைப் பார்த்தபடியே கைகளை அசைத்தபடி அங்கேயே நின்றிருந்தார். தொலைவு நீண்டது. உருவங்கள் மறைந்தன.

அன்னை கண்களைத் துடைத்தவராய் விடு திரும்பினர். அன்னை வீட்டை அடைந்ததும் பெருமூச்சு விட்டபடியே வராந்தாவில் தரையில் சரிந்து உட்கார்ந்து, வெயிலில் தன் மகளும் மகனும் போன பாதையைப் பார்த்தபடியே இருந்தார்.

விடியற்காலையில் எழுந்திருந்து இவ்வளவு நேரம் மிகவும் கடுமையாக உழைக்கும் அன்னை நடுப்பகலில் எப்பொழுதும் சிறிது நேரம் படுத்து ஓய்வெடுப்பார். படுக்கையும் அவர் அறையருகில் இருந்த வராந்தாவில் போடப்பட்டிருந்தது. படுக்கையருகில் கூட அன்னை போகவில்லை. தன் மகளும் மகனும் போன திசையையே பார்த்தபடி உட்கார்ந்திருந்தார்.

சிறிது நேரம் கழிந்தது. அதற்குள் வீட்டுக்குள் இருந்த பெண்களில் ஒருத்தி அந்தத் தம்பதிகளில் 'மகள்' வைத்திருந்த டவல் அவள் தங்கியிருந்த இடத்தில் கிடப்பதைப் பார்த்து எடுத்து வந்தாள். இதைக் கண்டதும் அந்த மகள் வெயிலில் போனதைப்பற்றி நினைத்து, மனதிற்குள் அடங்கிக் கிடந்த அன்னையின் துயரம் இப்போது அதிகமாகி விட்டது. அது காரணமாக அன்னை வாய் விட்டே அழ ஆரம்பித்து விட்டார். ''ஐயோ! என் மகள் எவ்வளவோ தொலைவிலிருந்து வந்தாளே! ஒரு நாள் கூட என்னுடன் தங்காமல் போய் விட்டாளே! வெயிலில் குழந்தைகளோடு போகிற அவளுக்கு இந்த டவல் இருந்தால் குழந்தையின் தலைமீது போட்டுக் கொண்டு போவாளே! மறதியால் விட்டு விட்டாளே. இதை யார் கொண்டு போய்க் கொடுப்பார்? இந்த டவலை அவள் பிறகு எங்கெங்கே தேடுவாளோ'' என்று புலம்ப ஆரம்பித்துவிட்டார்.

அன்னையின் அழுகையைக் கேட்ட அருகிலிருந்த அவருடைய அன்புக்கு உரிய சிறுவன் அந்த டவலை எடுத்துக்



அன்னை சாரதாதேவியார்

கொண்டு ஓடினன். ஊர்க் கோடியில் குளத்தைத் தாண்டி, வயலில் வரப்பின் மீது இறங்கிக் கொண்டிருந்த அவர்களிடம் கொண்டுபோய் டவலைக் கொடுத்தான்.

டவலைக் கண்டதும் அந்தப் பெண் தன் பிழைக்கு மிகவும் வருந்தினள். திரும்பத் திரும்ப அந்தச் சிறுவனிடம் மன்னிப்புக் கேட்டு நன்றி சொல்லி விட்டு மேலே பயணம் துவங்கினள்.

சிறுவன் திரும்பி வந்து அன்னையிடம் நடந்ததைச் சொன்னன். அதைக் கேட்ட அன்னை மிகவும் மகிழ்ந்தார்.

என்றலும் அன்னையார் மேலும் வராந்தாவில் உட்கார்ந்தபடியே தம் மகள் இந்தக் கடுமையான வெயிலில் குழந்தைகளோடு செல்வதை நினைத்து வருந்தியபடியே, அது குறித்து ஒன்றிரண்டு வார்த்தைகளை வருத்தத்தோடு கூறியபடியே இருந்தார்.

சிறுவன் ஓய்வு எடுப்பதற்காக அருகில் இருந்த அறைக்குள் சென்றான். திடீரென்று, அன்னை உரக்க, ''ஓ கடவுளே! குளித்த பிறகு துவைத்துக்கொண்டு



வந்து காயப்போட்ட புடைவையை என் மகள் எடுத்துக்கொள்ளாமலே போய் விட்டாளே! நாளைக்குப் புடைவைக்கு என்ன செய்வாள்? புடைவை எங்கே என்று நாளைக்குத் தேடும்போது, 'ஓ! அம்மா வீட்டில் விட்டுவிட்டேன்' என்று நினைப்பாளே!'' என்று கூறுவது கேட்டது.

அன்னையின் இந்தக் குரலைக் கேட்டதும் சிறுவன் அன்னை இருந்த அறைக்குள் ஓடி வந்தான். அதற்கு முன்பே அன்னையின் குரல் கேட்டு வீட்டில் இருந்த பெண்கள் அனைவரும் அங்கே வந்து விட்டிருந்தனர். அவர்கள் நடுவே அன்னை கண்ணீர் மல்கக் கையில் ஒரு பழம் புடைவையை வைத்தபடி மிகவும் சோகமாக எதிரில் எங்கோ பார்த்தபடி நின்றிருந்தார். அவர் பார்வை எங்கோ வெயிலில் நடந்து செல்லும் தம் மகளைப் பார்ப்பது போல் இருந்தது. அவரது வாய் 'மகளே! மகளே!' என்று முணு முணுத்துக்கொண்டிருந்தது.

எல்லோருடனும் குளித்துவிட்டு வந்த அந்தப் புதிய பக்தை காயப்போட்ட தன் புடைவையை வீட்டிற்குச் செல்ல வேண்டும் என்ற அவசரத்தில் எடுக்காமலே மறந்து அங்கே விட்டுப் போய் விட்டிருந்தாள்.

அன்னையின் கூட்டத்தில் இருந்த பிள்ளையில்லாத ஒருத்தி கோபத்துடனும் எரிச்சலுடனும், ''அவளால் எப்படி இதையெல்லாம் கவனிக்க முடியும்? அவளுக்குத்தான் நஞ்சு குஞ்சு என்று அத்தனை குழந்தைகள் இருந்தனவே! அவள் அவற்றைப் பார்ப்பாளா? புடைவையைப் பார்ப்பாளா?'' என்று கூறினாள்.

மற்றும் சிலரும் அந்தப் பெண்ணைப் பற்றிக் கோபமாகக் குறைகூறிப் பேச ஆரம்பித்தார்கள்.

இதைக் கேட்ட அன்னை ஓவென்று அழ ஆரம்பித்து விட்டார். துக்கம் தொண்டையை அடைக்கத் தேம்பியபடி, ''மறதி என்பது எல்லோருக்கும் சாதாரணம். ஐயோ! காலையில் பத்து மணிக்கு வந்தாள்; இரண்டு மணிக்கே புறப்பட்டுவிட்டாளே! அவளால் பிரிவை எப்படித் தாங்கிக்கொள்ள முடியும்? அந்தச் சோகத்தில்தான் என் மகள் இந்தப் புடைவையை மறந்துவிட்டாள். ஒரு ராத்திரிகூட அவள் இங்கே தங்கவில்லையே!'' என்று மேலும் மேலும் அழ ஆரம்பித்துவிட்டார்.

அன்னையின் அழுகையை அந்தச் சிறுவனால் பொறுக்க முடியவில்லை. அன்னை கையிலிருந்த புடைவையை வாங்கிக் கொண்டு முன்பு போல் ஓடி அந்தப் பெண்ணிடம் கொடுத்துவிட்டு வந்தால் அன்னையின் துயரம் நீங்கும் என்று அவன் நினைத்தான். உடனே அதை வாங்கிக் கொண்டு ஓட முனைந்தான்.

அதைக் கண்ட அன்னையின் தம்பி மகள் நளினி தீதி மிகுந்த கோபத்தோடு, ''அவன் இப்போதுதான் இந்தக் கடுமை

யான வெயிலில் ஓடி டவலைக் கொடுத்து விட்டு வேர்க்க வேர்க்க வந்திருக்கிறான். இந்நேரம் அவர்கள் எவ்வளவோ தூரம் போயிருப்பார்கள். இப்போது அவர்களுக்காக மறுபடியும் இந்தப் பையன் ஓட வேண்டுமா?'' என்று கத்தினாள்.

அவள் சொன்னதைக் கேட்டுச் சிறிது மலர்ச்சி யடைந்திருந்த அன்னையின் முகம் மறுபடியும் வாடிவிட்டது. இதைக் கண்ட சிறுவன், ''அவர்கள் ஒன்றும் அதிக தூரம் போயிருக்க மாட்டார்கள். சீக்கிரத்தில் நான் புடைவையைக் கொண்டுபோய்க் கொடுத்துவிட்டுத் திரும்பிவிட முடியும்!'' என்றான்.

இதைக் கேட்ட அன்னை மிகுந்த மகிழ்ச்சியடைந்தவராய் ஆவலோடு, ''மகனே! வெயில் கடுமையாக இருக்கிறது. குடையை எடுத்துக்கொண்டு போ'' என்று சொல்லிக் குடையை அவனிடம் கொடுத்தார்.

இதற்குள் அந்தத் தம்பதிகள் நெடுந் தொலைவு போய் விட்டிருந்தார்கள். சிஸ்டி கிராமத்தைத் தாண்டி ஒன்றரை மைல்களுக்கு அப்பால், அவர்களுடைய வண்டியை எங்கே நிறுத்திவிட்டு வந்தார்களோ அங்கே போய்விட்டிருந்தார்கள்.

சிறுவன் மூச்சுப் பிடித்துக்கொண்டே ஒரே ஓட்டமாக, ''அக்கா! அக்கா!'' என்று கத்திக்கொண்டே ஓடினான். அவன் குரல் கேட்டுத் திரும்பிய அந்தப் பெண், சிறுவன் மறுபடியும் ஓடி வருவதைக் கண்டு ஆச்சரியப்பட்டாள். அவன் அருகில் வந்ததும் அவன் கையில் இருந்த தன் புடைவையைப் பார்த்ததும் அவளுக்குச் சிறுவன் ஓடி வருவதற்கான காரணம் புரிந்துவிட்டது. தன் மோசமான மறதியையும், அது காரணமாக இந்தக் கொளுத்தும் வெயிலில் சிறுவன் கழனிக்காட்டின் நடுவே வரப்புக்களிலும் கால்வாய்களிலும் இவ்வளவு தூரம் மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்க ஓடி வர வேண்டிய நிலை ஏற்பட்டதையும் குறித்து மிகுந்த வேதனையும் வெட்கமும் அடைந்தாள். அவளால் சிறிது நேரம் பேசக்கூட முடியவில்லை. அருகில் வந்ததும், ''தம்பி! தம்பி!'' என்று அந்தச் சிறுவனை அணைத்துக்கொண்டாள்.

## தத்துவத் திவலைகள்

உபாத்தியாயர் இருந்தாலன்றி மற்றச் சிலேட்டு, பை, புத்தகம், நோட்டு எதுவும் பையனுக்குப் பயன்படுவதில்லை. அது போல் பக்தி இல்லாமல் ஜபம், பூஜை, பாராயணம், ஸ்நானம், தியானம் இவை எதுவும் பயன் தருவதில்லை.
—கிருஷ்ணப்பிரேமி

தீர்த்தங்களும் தெய்வ உருவங்களும் உபாசகனுடைய சிரத்தை விசுவாசம் முதலியவற்றால் வீரியம் பெறுகின்றன. —ரமண மகரிஷி

பெண்மை என்பது தாய்மை. தாய்மை என்பது தொண்டுக்கு உரியது. —திரு. வி. க.

பிறர் தூற்றும்போது புத்திமானாக இருப்பவன் தத்துவ ஆராய்ச்சி செய்ய வேண்டும். பிறர் சொன்னது உண்மையாக இருந்தால் ஏன் கோபிக்க வேண்டும்? பொய்யாக இருந்தாலோ கோபத்தால் என்ன பிரயோஜனம்?
—ஆசார்ய சுந்தரபாண்டியன்

மலர் தனக்கு வாழும் காலம் மாறிக் கீழே விழும்போது எத்தனை அமைதியுடன் இருக்கிறதோ, அத்தனை அமைதியுடன் ஞானி தனக்கு வரும் துன்பங்களை நோக்குகிறான். —உயோநே நோகுச்சி

சாதியினால் எவரும் உயர்ந்தவர் என்று கொள்ள வேண்டாம். அறிவினால் மிக்கவரே உயர்ந்தவர்.
—நன்னெறி

தானாக வருவதல்ல சந்தர்ப்பம். சந்தர்ப்பத்தை மனிதன் தானே உண்டு பண்ணிக் கொள்ள வேண்டும்.
—பெர்னட் ஷா

அன்னையார் வீட்டில் புடைவையைக் கண்டெடுத்ததையும், அன்னை அந்த மகளுக்காக அழுததையும், அதன் பிறகு நடந்த செய்திகளையும் சிறுவன் சொன்னான்.

அவன் சொன்னதைக் கேட்ட அந்தப் பெண் சிலைபோல் நின்றுவிட்டாள். அவள் கண்களில் நீர் வழிந்தது. தோய்த்துக் காயவைத்த புடைவையைக்கூட எடுத்துச்செல்ல மறந்துவிடும் தன்மீது அன்னை யாருக்கு அவ்வளவு அன்பா! ''அம்மா! அம்மா!'' என்று அவள் அழ ஆரம்பித்து விட்டாள். அந்த மகள் யாரோ! இத்தனை நாள் வரை அவள் அன்னையைப் பார்த்த தில்லை. இன்று காலை பத்து மணிக்குத் தான் அன்னையை அவள் முதல் முறையாகப் பார்த்தாள். இரண்டு மணிக்குள் பிரிந்துவிட்டாள். அவ்வளவு குறைவான நேரமே அவள் அன்னையுடன் இருந்தாள். அதற்குள் அன்னைக்கு இத்தகைய அன்பா! இவ்வளவு பாசமா!

சிறுவன் கண்களைத் துடைத்துக் கொண்டு விடைபெற்றான்.

அந்த மகளும் அவள் கணவனும் குழந்தைகளும் வண்டியில் அமர்ந்தனர். மாடுகள் நடக்கத் துவங்கின. அவள் மனம் நடக்கவில்லை; அது அன்னையிடமே இருந்தது.

அந்த அன்னையிடம், எங்கிருந்தோ வந்து சிறிது நேரம் தன்னுடன் தங்கிப் பிரிந்த பெண்ணுக்காக, 'மகளே! ஒரு ராத்திரிகூட என்னுடன் தங்கவில்லையே' என்று கண்ணீர் வடிக்கிற, மற்றவர்கள் அவளைத் தூற்றுவதைக் கேட்டு அவளுக்காக மேலும் மேலும் அழுத கண்ணீர் வடிக்கிற தாயிடமே அந்தப் பெண்ணின் இதயம் தங்கிவிட்டது.

அந்த மகள் அந்தத் தாயை எப்படி மறப்பாள்? எப்படி மறக்க முடியும்? அந்த மகள் மட்டுமல்ல; தாயே! உன் அன்பை உணர்ந்த எந்த மகள் அல்லது மகன்தான் உன்னை மறக்க முடியும்? ★

